கழக வெளியீடு: ௭௬௨

# சிறுவர் பாட்டுநூற்கோவை



கழகக் கலவ்யற்ஞா குழுவினர்
இயற்றியவை



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

First Edition: Feb., 1955.

SIRUVAR PATTUNOOR KOVAI

[All Rights Reserved]

Checked 1969

*Published by*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS
PUBLISHING SOCIETY, TINNEVELLY, LIMITED.
1/140, BROADWAY, :: MADRAS-1.

*Head Office:*

98, EAST CAR STREET, TIRUNELVELI.

Appar Achakam, 2/140, Broadway, Madras-1.—C. 500.

# பதிப்புரை

இளமாணவர் கல்வியில் முன்னேற்ற மடைவதற்குரிய வழிகள் பல; அவற்றுள் பாட்டுக்களின் வாயிலாகப் பற்பல கருத்துக்களைக் கற்பித்தல் சிறந்ததொரு வழியாகும். பாட்டுக்கள் இயற்கையும், இன்னோசையும் உடையனவாதலின், அவற்றைச் சிறுவர் மிகுதியாக விரும்புகின்றனர்.

இக்கருத்துக்கொண்டு குழந்தைகளுக்கு ஏற்ற மிக மிக எளிய பாட்டுக்களும், ஞாயிறு, திங்கள், காற்று, மழை முதலியனபற்றிய அறிவியற் கருத்தமைந்த பாட்டுக்களும், பல்வேறு நாட்டுப் பழக்கவழக்கங்களை விளக்கும் பாட்டுக்களும், இயற்கை, கணக்கு, வரலாறு, உரையாடல் முதலிய பல கருத்துக்கள் பொதிந்து இயற்றப்பட்ட பாட்டுக்களும் தொகுத்துப் பல பாட்டு நூல்கள் கழகவழி முன்னரே வெளியிட்டுள்ளோம்.

அவற்றுள் '**குழந்தைப் பாட்டுக்கள்**,' '**அறிவுக்கதிர்**,' '**சிறுவர் உலகம்**,' '**கழகச் சிறுவர் பாட்டு**,' '**கழக இளைஞர் பாட்டு**,' என்னும் ஐந்து நூல்களையும் ஒன்றாகத் தொகுத்துச் **சிறுவர் பாட்டுநூற் கோவை** என்னும் பெயரமைத்துத் தற்போது நூல்நிலையங்கட்கும், பரிசுகட்கும் ஏற்றவாறு அழகிய கட்டடம் செய்து வெளியிடுகின்றோம்.

நூல்நிலையக் காப்பாளரும், ஆசிரியப் பெருமக்களும், பிறரும் இந்நூலையும் இதுபோன்று கழகவழி வெளிவந்துள்ள பல கொத்து நூல்களையும் வாங்கியும், வாங்குவித்தும் தமிழ்வளரத் துணைபுரிவார்களாக.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# உள்ளுறை

கழக வெளியீடு, ௨௩௬

# குழந்தைப் பாட்டுக்கள்

## [NURSERY RHYMES]



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி - 6. சென்னை - 1.
1961

# பதிப்புரை

சிறுவர் கல்வியின் முன்னேற்றத்திற்குரிய வழிகள் பல; அவற்றுள், **பாட்டுக்களின்** வாயிலாகப் பலவற்றைக் கற்பித்தல் சிறந்ததொரு வழியாகும்.

பாட்டு இயற்கை; உரைநடை செயற்கை; ஆதலின், சிறுவர் பாட்டுக்களை மிகுதியாக விரும்புகின்றனர். அன்றியும், அவர் தம் நினைவில் நீங்காது நிலைப்பனவும் பாட்டுக்களே ஆகும்.

நம் நாட்டில் இனிய **குழந்தைப் பாட்டுக்கள்** பல நிலவுகின்றன; அவற்றுள் சில இந்நூலில் தொகுக்கப் பெற்றுள்ளன. இந்நூலில் காணப்படும் ஏனைய பாட்டுக்கள் புதியவை; இவற்றுள், சிலவற்றில் பழமொழிகள் விளக்கபெற்றுள்ளன; சிலவற்றில் நல்வழிகள் கூறப்பெற்றுள்ளன; சிலவற்றில் அரிய கருத்துக்கள் அமைக்கப்பெற்றுள்ளன. இவற்றை இயற்றி உதவிய **தமிழ்ப்பேராசிரியர், திருவாளர், மு. வரதராசனுர்** அவர்கட்கு நன்றி செலுத்துகின்றோம்.

இச் சிறுநூல் சிறுவர்க்கு இன்பம் தருவதொரு நல்விருந்தாகும் என்றும், துவக்கப் பள்ளி ஆசிரியர்கட்குப் பெரிதும் பயன்படுமென்றும் நம்புகின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# பொருளடக்கம்

# 1. நிலாப் பாடல்



நிலா நிலா
எங்கே போகிறாய்?
மலைக்குப் போகிறேன்.

மலைக்கு எதற்கு?
மரம் வெட்ட.





மரம் எதற்கு?
செப்புச் செய்ய.

செப்பு எதற்கு?
காசு போட.





காசு எதற்கு?
மாடு வாங்க.

மாடு எதற்கு?
பால் கறக்க.





பால் எதற்கு?
நீ குடிக்க.



## 2. அம்புலி அழைத்தல்

அம்புலி அம்புலி வா வா
அலைகடல் கடந்து வா வா
அம்புலி அம்புலி போ போ
அப்பன் அடிக்கிறான் போ போ
அம்புலி அம்புலி வா வா
அப்பன் அடிவில்லை வா வா
அம்புலி அம்புலி தா தா
அழகான வெளிச்சம் தா தா.

---

## 3. நிலா அழைத்தல்

நிலா நிலா வா வா
நில்லாமல் ஓடி வா
மலை மேலே ஏறி வா
மல்லிகைப் பூ கொண்டு வா

நடு வீட்டில் வையே
நல்ல புகழ் செய்யே.

---

## 4. நிலாப் பாட்டு

நிலா நிலா எங்கே போனாய் ?
நீல மலைக்குப் போனேன் ;
நீல மலைக்கு ஏன் போனாய் ?
மண் எடுத்து வர ;
மண் எதற்காக ?
வீடு கட்ட ;
வீடு எதற்காக ?
குடி யிருக்க ;
குடி எதற்காக ?
குழந்தை வளர்க்க ;
குழந்தை எதற்காக ?
ஓடி விளையாடி,
உன்னைப் போல் கேடக.

---

# 5. பறவைப் பாட்டு



காக்கா காக்கா
கண்ணுக்கு
மை கொண்டுவா.



குருவீ குருவீ
கொண்டைக்குப்
பூக் கொண்டுவா.



கொக்கே கொக்கே
குழந்தைக்குத்
தேன் கொண்டுவா.



கிளியே கிளியே
கிண்ணத்தில்
பால் கொண்டுவா.



# 6. கிளிப் பாட்டு

பேசு கிளியே பேசு கிளியே
'பேதம் ஒன்றும் இல்லை,' என்று
பேசு கிளியே;
சொல்லு கிளியே சொல்லு கிளியே
'சோம்பல் தான் வேண்டாம்,' என்று
சொல்லு கிளியே;
கூறு கிளியே கூறு கிளியே
'கூர் அறிவு வேண்டும்,' என்று
கூறு கிளியே;
கொஞ்சு கிளியே கொஞ்சு கிளியே
'கோயில் சென்று வணங்க,' என்று
கொஞ்சு கிளியே;
செப்பு கிளியே செப்பு கிளியே
'செம்மையாக வாழ்க,' என்று
செப்பு கிளியே.'

---



2



# 7. தாலாட்டு

ஆராரோ ஆராரோ
ஆரிவரோ ஆராரோ
யார் அடித்தார் நீ அழுதாய்?
அடித்தாரைச் சொல்லி அழு;
என் கண்ணே! என் மணியே!
அடித்தாரைச் சொல்லி அழு;
பாட்டி அடித்தாளோ
பாலூட்டுங் கையாலே?
மாமா அடித்தாரோ
மாலையிடுங் கையாலே?
தாத்தா அடித்தாரோ
தாங்கிவருங் கையாலே?
யாரும் அடிக்கவில்லை;
ஐவிரலும் தீண்டவில்லை;
பசித்திடவே நான் அழுதேன்;
பாசமுள்ள என் தாயே. (ஆரா)

# 8. எண்ணல் எடுத்தல் முகத்தல் நீட்டல்



ஒருநாள் அப்பாவுடனே
ஒழுங்காய்க் கடைக்குப்
போனேன்
எலுமிச்சம்பழம் வாங்கினார்
எண்ணி எண்ணிக்
கொடுத்திட்டான்



உருளைக்கிழங்கு வாங்கினார்
ஒரு தராசில் எடை
போட்டான்



பச்சை அரிசி வாங்கினார்
படியால் அளந்து
கொடுத்திட்டான்



முழுத்துணிதான் வாங்கினார்
முழக்கோல் கொண்டு
அளந்திட்டான்
பலவகையாம் வியாபாரம்
பலரும் செய்யக்
கண்டேனே.

---




பை




காலணா = 3 பை




அணா = 4 காலணா




ரூபா = 16 அணா = 64 காலணா = 192 பை

## 9. ரூபாய்க்கு எத்தனை பை?

தம்பி தம்பி ஒரு கணக்கு
தப்பாமல் விடை சொல்வாயோ?
பைகள் மூன்று சேர்ந்தாலே
காலணா என்றே சொல்வாரே;
காலணா நான்கு சேர்ந்தாலே
ஓரணாஎன்றே சொல்வாரே;
அணா பதினாறு சேர்ந்தாலே
ஆகும் ரூபாய் என்பாரே.
ரூபாய் ஒன்றில் எத்தனை பை?
சொல்லு நீதான் பார்ப்போமே.

ரூபாய் கொடுத்துக் கடைதனிலே
சில்லறை வாங்கித் தருவாயே
சில்லறை வாங்கித் தருவாயேல்
சீக்கிரம் எண்ணி உரைப்பேனே.

---



## 10. தத்தாங்கி

தத்தாங்கி தத்தாங்கி தட்டும் பிள்ளை
தயிரும் சோறும் தின்னும் பிள்ளை
அப்பம் சுட்டாலும் தின்னும் பிள்ளை
அவல் இடித்தாலும் தின்னும் பிள்ளை

---



## 11. அசைந்தாடு

அசைந்தா டம்மா அசைந்தாடு
அன்னம் போல அசைந்தாடு
மயிலைப் போல அசைந்தாடு
குயிலைப் போலக் குதித்தாடு
பாய்ந்தா டம்மா பாய்ந்தாடு
பம்பரம் போலச் சுழன் றாடு.

---



## 12. கைகொட்டு

கைகொட் டம்மா கைகொட்டு
கண்ணே மணியே கைகொட்டு
தலையாட் டம்மா தலையாட்டு
தாமரைப் பூவே தலையாட்டு

கால்வி சம்மா கால் வீசு
கரும்பே தேனே கால் வீசு
உடம்பை வளைத்து ஆடம்மா
உல்லாசமாய் ஓடம்மா.

---



## 13. சாய்ந்தாடு

சாய்ந்தாடம்மா சாய்ந்தாடு
சாயக் கிளியே சாய்ந்தாடு
முத்துவிளக்கே சாய்ந்தாடு
குயிலே மயிலே சாய்ந்தாடு
கட்டிக் கரும்பே சாய்ந்தாடு
கண்ணே மணியே சாய்ந்தாடு

---



## 14. கைவீசு

கைவீசம்மா கைவீசு
கைவீசம்மா கைவீசு

கடைக்குப் போகலாம் கைவீசு
கண்ணால் பார்க்கலாம் கைவீசு

சொக்காய் வாங்கலாம் கைவீசு
சொகுசாய்ப் போடலாம் கைவீசு

பொம்மை வாங்கலாம் கைவீசு
பொட்டு வைக்கலாம் கைவீசு

வேடிக்கை பார்க்கலாம் கைவீசு
விளையாடப் போகலாம் கைவீசு

கோயிலுக்குப் போகலாம் கைவீசு
கும்பிட்டு வரலாம் கைவீசு.

---



## 15. அத்தை அத்தை நெய் ஊற்று

அத்தை அத்தை நெய் ஊற்று
    அன்பாய் அன்பாய் நெய் ஊற்று
அகத்திக் கீரைப் பிண்ணைக்கு
    அதிலே கொஞ்சம் நெய் ஊற்று
இந்த உருளைக் கிழங்கிலே
    இன்னும் கொஞ்சம் நெய் ஊற்று
பிஞ்சுக் கத்தரிக் காயிலே
    பின்னும் கொஞ்சம் நெய் ஊற்று
மெதுவாய்க் கொஞ்சம் நெய் ஊற்று
    மேலும் கொஞ்சம் நெய் ஊற்று.

# 16. உயரப் பறப்பது எது?



குருவி பறக்கும் வீட்டின்மேல்
காக்கை பறக்கும் அதற்கு மேல்

புறுக்கள் பறக்கும் புதுமையாய்ப்
பருந்து பறக்கும் முகில் அருகே

கப்பல் பறக்கும் அதைப்போலே
காற்றில் பறக்கும் எல்லாமே

எல்லாம் உயரப் பறந்தாலும்
என்மனம் போலப் பறந்திடுமோ?



## 17. என்னை வளர்த்த அன்னை

தென்னை மரமே கேளாய்
　　தென்னை மரமே கேளாய்
உன்னை வளர்த்தவர் அப்பா
　　என்னை வளர்த்தவர் அம்மா
உனக்கும் வயது ஆறே
　　எனக்கும் வயது ஆறே
நீ வளர்ந்த உயரம்
　　நான் வளர வில்லை
நீ கொடுப்பாய் இளநீர்
　　நான் கொடுப்ப தென்ன ?
ஆனாலும் என்னை அன்பாய்
　　அன்னை வளர்த்தலைப் பாராய்.

# 18. என் நண்பர்கள்



புருவே புருவே
பூனையைக் கண்டு
அஞ்சாதே
பூனையே பூனையே
புருவை ஒன்றும்
செய்யாதே
குருவி குருவி
கூட்டை விட்டுப்
போகாதே
அண்ணா அண்ணா
குருவிக் கூட்டைக்
கலைக்காதே
காக்காய் காக்காய்
கண்டால் பறந்து
ஓடாதே
அம்மா அம்மா
காக்கையைக் கல்லால்
எறியாதே
பசுவே பசுவே
பயந்து தலையை
ஆட்டாதே
அப்பா அப்பா
பசுவைக் கயிற்றால்
அடிக்காதே.



# 19. வாடாத பூ

ரோஜாப் பூ வாடி விடும்
சண்பகப் பூ வாடி விடும்

மல்லிகைப் பூ வாடி விடும்
முல்லைப் பூ வாடிவிடும்.

வாடாத பூ எதுவோ?
வளருகின்ற இடம் எதுவோ?

வாடாத பூ அறிந்தேன்
வளருகின்ற இடம் அறிந்தேன்;

வாடாத பூ படிப்பூ*
வளரும் இடம் பள்ளிக்கூடம்.

---

* படிப்பு.



## 20. உனக்கு என்ன வேண்டும்?

உனக்கு என்ன வேண்டும்
    என்று அப்பா கேட்டால்,
புதிய புதிய புத்தகம்
    பழைய பழைய பாடங்கள்
அரிய அரிய ஆடல்கள்
    அன்பாய் அன்பாய்ப் பாடல்கள்
நாளும் நாளும் நல்லுணவு
    நல்ல நல்ல ஆடைகள்
இனிய இனிய வாழ்வுதான்
    இன்றும் என்றும் வேண்டுமே
என்று நான்தான் சொல்வேனே
    எண்ணி எண்ணி மகிழ்வேனே.



# 21. காக்கை உட்காரப் பனம்பழம் விழுதல்

பனை மரத்தில் ஒருநாள்
　　பழங்கள் பழுத்து இருக்க
அவற்றில் ஒரு பனம்பழம்
　　அநேக நாளாய்ப் பழுத்து
விழப் போகின்ற நேரம்
　　வந்ததொரு காக்கை
அதன்மேல் அமர்ந்த உடனே
　　அந்தப் பழமும் விழவே
கண்டிருந்தோர் பலரும்
　　காக்கை யாலே என்றார்
இதுமுறையோ சொல்லாய்
　　இனிமையான சொல்லால்.



## 22. குடுகுடுப்பைக்காரன்

குடுகுடு குடுகுடு குடுகுடு
நல்ல காலம் பிறக்குது
நல்ல காலம் பிறக்குது;

குடுகுடு குடுகுடு குடுகுடு
வருகுது வருகுது வாழ்வு
வந்தது வந்தது செல்வம்;

குடுகுடு குடுகுடு குடுகுடு
குறைகள் எல்லாம் பறக்கும்
குணங்கள் எல்லாம் பிறக்கும்;

குடுகுடு குடுகுடு குடுகுடு
எல்லாம் நல்ல காலம்
தாயே நல்ல காலம்.

குடுகுடு குடுகுடு குடுகுடு
எனக்குப் பசியாய் இருக்குது
எனக்குச் சோறு கொடு கொடு
கொடுகொடு கொடுகொடு கொடுகொடு
குடுகுடு குடுகுடு குடுகுடு.

---

## 23. குருவிக்காரி



ஊசி வாங்கலையோ ஆயா !
ஊசி வாங்கலையோ ஆயா!
ஐந்து ஊசி காலணா
பத்து ஊசி அரையணா
ஆயா கொஞ்சம் கூழ்வாரு
ஆறு ஊசி கொடுப்பேனே
ஆயா ஆயா பசிக்குது
தாயே தாயே பசிக்குது
அம்மா குருவிக்காரி நான்
அம்மா பிச்சைக்காரி தான்.

# 24. எந்த ஊருக்குப் போகலாம்



பெங்களூருக்குப் போகலாம்
தங்க வளையல் வாங்கலாம்
கைகளிலே போடலாம்
குலுக்கிக் குலுக்கிக்
காட்டலாம்.



தஞ்சாவூருக்குப் போகலாம்
தாழம்பூ வாங்கலாம்
தலைதனிலே வைக்கலாம்
தடவித் தடவிப்
பார்க்கலாம்.



மைலாப்பூருக்குப் போகலாம்
மல்லிகைப்பூ வாங்கலாம்
மாலையாகக் கட்டலாம்
மகிழ்ந்து தலையில்
சூடலாம்.

---



## 25. ஆயிரம் காக்கைக்கு ஒரு கல்

ஆயிரம் காக்கை ஒருமாலை
ஆல மரத்தில் கூடினவே

பலவகைப் பாடம் படித்தனவே
பாங்காய்ப் பாட்டுப் பாடினவே.

வழியில் சென்ற ஒருபையன்
வந்து ஒருகல் எறிந்தானே;

உடனே காக்கை எல்லாமே
ஒன்றாய்க் கரைந்து பறந்தனவே;

காக்கை ஆயிரம் ஆனாலும்,
கல்தான் ஒன்றே போதுமே.

---



## 26. மரமா? விதையா?

‘இந்த மரம் ஏது?’
என்று எண்ணிப் பார்த்தேன்.
“இதற்கு வித்து உண்டு
விதைத்தால் மரமாய் வளரும்,”
என்று ஒருவன் சொன்னான்;
உடனே எண்ணிப் பார்த்தேன்.

அந்த வித்து ஏது?
அதற்கு மரமே வேண்டும்;
வித்து முன்னே என்பதா?
மரம் முன்னே என்பதா?
இதனை அறிய மாட்டேன்;
இறைவனுக்கே விட்டேன்.

---



## 27. நாய் வாலின் கோணல்

நன்றி மிகுந்த நாயாம்—அதை
நாளும் வளர்த்தான் திண்ணன்;
சென்றால் கூடப் போகும்;
நினைந்தால் வாலைக் குழைக்கும்.
அந்த வாலோ கோணல்—நேர்மை
ஆக்க முயன்றான் திண்ணன்;
கொம்பு கொண்டே கட்டி—அதைக்
கோணல் போக்கி அமைக்க,
என்ன என்னவோ செய்தான்—அது
என்றும் நேராக வில்லை;
நாயின் வாலோ கோணல்—அதை
நம்மால் போக்கல் ஆமோ?

---



## 28. சிட்டுக் குருவி

சின்னச் சின்னக் குருவி
    சிங்காரக் குருவி
சிரிக்கத் தெரியாத
    சிட்டுக் குருவி
அழவும் தெரியாத
    அழகான குருவி
மரத்தில் கூடுகட்டி
    மகிழ்ந்து முட்டையிட்டு
அருமைக் குஞ்சு பெற்று
    அன்பாக வாழ்வாயே.

---

## 29. எங்கும் பச்சையே!

வயல் நிறைந்த பயிர் எல்லாம் பச்சையே
மரம் அடர்ந்த இடம் எல்லாம் பச்சையே
பசுங்கிளியின் உடம்பெல்லாம் பச்சையே
பலசுவையாம் காய் எல்லாம் பச்சையே
என் உடையின் நிறந்தானும் பச்சையே
என்தோளில் குத்தியதும் பச்சையே
இரு கண்ணுக் கழகுதரும் பச்சையே
இனியதொரு விருந்தாகும் பச்சையே.

---

## 30. ஔவையாரும் நெல்லிக்கனியும்



காய்காய் நெல்லிக்காய்
கனியானால் நெல்லிக்கனி
அதியமான் பெற்றிட்டான்
ஔவைக்குக் கொடுத்திட்டான்
ஔவையார் அதை உண்டார்
அதிக நாள் வாழ்ந்திட்டார்
தமிழ்ப் பாட்டுப் பாடினார்
தமிழ் நாட்டை வாழ்த்தினார்.

---

## 31. உறுப்புக்கள் எதற்கு?

இரு சிறு கண்கள்
இறைவனைக் காண
இரு சிறு செவி அவர்
இசையினைக் கேட்க
இரு சிறு கை அவர்
ஏவலைச் செய்ய—இயல்பாக
இரு சிறு கால் அவர்
இசைவழி நடக்க
ஒரு சிறு நா அவர்
உயர் நிலை போற்ற
ஒரு சிறு மனதால்
உண்மையை அறிந்தே—உயர்வீரே.

---

## 32. தமிழ் நாடு

சேர நாட்டில் யானையாம்
சோழ நாட்டில் சோருகும்
பாண்டி நாட்டில் முத்தாகும்
தொண்டை நாட்டில் சான்றோராம்
எல்லாம் சேர்ந்தால் தமிழ் நாடு
என்னும் பெயரைப் பெற்றிடுமே.
பெயர் பெற்ற தமிழ் நாடு
பேசும் மொழியோ செந்தமிழாம்
செந்தமிழ் மொழியின் பெருமையைச்
சேர்ந்து வாழ்த்தி மகிழ்வோமே.

கழக வெளியீடு: ௧௧௪

# அறிவுக் கதிர்

[சிறுவர்க்கான தமிழ்ப்பாடல்கள்]



திரு. பு. ஆ. முத்துக்கிருஷ்ணன்
இயற்றியவை



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

# பதிப்புரை

உலகம் பல்வேறு இயற்கைகளைக்கொண்டு திகழ்கின்றது; அவை ஞாயிறு, திங்கள், காற்று, மழை முதலிய நுண்ணியற் பொருள்களும், அவைகளின் துணைகொண்டிலகும் உயிர்ப்பொருள்களும், பிறவுமாம்.

இவைகளை ஒவ்வொருவரும் அறிவது இயல்பு. இம்முறையில் சிறுவருலகம் இளம்பருவமுதல் அறிந்து தெளிவது; இவை அறிஞராவதற்குத் துணை புரியும்; இவை சிறுவர்கள் களிப்புடன் பாடி மகிழ்தற்கேற்ற செந்தமிழ்ப் பாடல்களால் அமையின், கல்லிற் பொறித்த எழுத்துப்போல் சிறார்கள் மனத்திற் பதியும்.

ஆதலால், இவைகளைக் குறிக்கோளாகக்கொண்டு பாட்டுவடிவத்தில் இந்நூலை ஆக்குவித்து, 'அறிவுக் கதிர்' என்னும் பெயருடன் அழகிய முறையில் செப்பஞ்செய்து வெளியிட்டுள்ளோம்.

இதனை நன்முறையில் ஆக்கி அளித்தவர் திரு. பு. ஆ. முத்துக்கிருஷ்ணன் அவர்கள். தமிழ்மக்கள் வாங்கிக் கற்றுப் பெரும்பயன் எய்துவரென நம்புகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை




கதிரவனே வா ! வா !—ஒளிர்
கண்ணாநீ வா ! வா !
உதிரும்படி இருளை—ஓட்டும்
உலகின் முதல் வா ! வா ! 1

அங்கமெல்லாம் ஒளிசேர்—புவி
அழகாநீ வா ! வா !
தங்கப் பழம் போல—கிழக்கில்
தகதக வென வருவாய். 2

சூரியனே வருக—செஞ்
சுடர் முகனே வருக.
பாரில் திசை காலம்—காட்டும்
பகலவனே வருக. 3

தன்னை என்றென்றும்—நிலையாய்த்
தாங்கும் கதிர் என்று
உன்னை வலமாகத்—தினமும்
உருண்டு வரும் பூமி. 4

நிலவுக்கும் உயிர் நீ—நில
நீருக்கும் உயிர் நீ.
பலவுயிர்த் தாவரங்கள்—வாழப்
பண்ணும் தொழில் புரிவோய். 5

அறிவுக் கதிர் பரவ—எங்கள்
அன்புத் தமிழ் மலர
வருவாய் இளம் பரிதி—உன்னை
வாழ்த்தி வணங்கு கின்றோம். 6






தண்ணொளி வீசும் வெண்ணிலவே நீ
தரையில் வருவாயோ ?
கண்ணொளி யோடு கருத்தொளி சேரும்
கல்வியைத் தருவாயோ ? 1

வாங்கும் ஒளியை வஞ்சகமின்றி
வாரி வழங்குகின்றாய்
ஓங்கும் மரம் செடி கொடி இலை மீதும்
ஒளி மழை பொழிகின்றாய். 2

இரவைப் பகலாய்ச் செய்திட வானில்
எழிலுடன் தோன்றுகிறாய்
வரவுக்கதிகம் செலவு செயாத நின்
மதிமுகம் காட்டுகின்றாய். 3

அல்லியும் கடலும் நின்முகம் காணின்
ஆனந்தப் பண்பாடும்
மல்லிகை முல்லையும் நின் வரவேற்று
மகிழ்ந்துமே உறவாடும். 4

இன்னலை நீக்கி இன்ப முண்டாக்கும்
இயற்கை தரும் அன்பே !
கன்னல் தமிழ்மொழி பயில்வோர்க் குதவும்
காவிய ஓவியமே ! 5

வாழிய ! வாழிய ! வெண்ணிலவே ! உனை
வாழ்த்தி வணங்குகின்றோம்
பாழிருள் போக்கிப் பகுத்தறி வூட்டும்
படிப்பை எமக் கருளே ! 6






மழை பொழியுது பார்!—தம்பி
மழை பொழியுது பார்!

தழை மரம் செடி கொடிகள் யாவும்
தாம் குளிக்கவே
தரையில் புரளும் வெள்ளம் பள்ளம்
தன்னில் குதிக்கவே. (மழை)

காற்று மேகம்கூடிகை கலக்கும் போதிலே
காடு மலைகள் மீதிலே
தோற்றும் மின்னல் இடிமுழக்கம்
தொடர வானிலே (மழை)

கோடை வெப்பம் மாற்றி எங்கும்
குளுகுளு வெனவே
இன்பம் சிலுசிலு வெனவே
ஓடை ஆற்றில் பெருக்கும் வெள்ளம்
சல சல வெனவே—நல்ல (மழை)

காய்ந்த வயலில் தீய்ந்த பயிர்கள்
கண்ணை விழிக்கவே
பயிர்ப் பண்ணை செழிக்கவே
ஓய்ந்து கிடந்த வாழ்வில் புதிய
ஊக்கம் பிறக்கவே—நல்ல (மழை)




கண்ணுக்குத் தெரியாத காற்றே!—இரு
கைகால்கள் உனக்குண்டோ விரைந்தோடக் காற்றே!
மண்ணுக்குள் உன்னிடம் எங்கே?—என்று
வாய்திறந்து சொல்லமாட்டாயோ நீதான். 1

மரம் செடி கொடியுள்ள காடோ?—இல்லை
வானவெளிதான் நீ வசிக்கின்ற வீடோ?
திறமாக உன் இடம் எதுவோ?—சூழும்
திக்குத்திசையெல்லாம் உனக்கென்றால் பொதுவோ? 2

உப்பிக் கிளம்பும் பலூனில்—விரைந்தே
ஓடுகின்ற மோட்டார் சைகிள் டயரில்
எப்படிப் புகுந்திருக்கின்றாய்?—உள்ள
இடத்திற்குத் தகுந்தாற்போல் குணம்மாறும் காற்றே!

சிரிக்கின்ற தென்றலாய் வருவாய்—ஒருநாள்
சீறும் புயலாகித் திடுக்கிடச் செய்வாய்
எரிக்கும் எண்ணெய் திரிவிளக்கின்—ஒளி
இருக்கவும் அணைக்கவும் செயவல்ல காற்றே! 4

பருவக் காற்றாய் மழைகொண்டு—வந்து
பயிரின் வளர்ச்சிக்குப் புரிவாய் நற்றொண்டு
ஒருவர்க்கும் உரிமையாயின்றி—இந்த
உலகத்துக் கேபொது வுடைமையாம் காற்றே! 5

நீரில் படகுகள் செலுத்த—இந்த
நீர்நிலத்தே உள்ள உயிரெல்லாம் பிழைக்க
பாரில் ஒலியலை பரப்ப—எதற்கும்
பக்கத்துத் துணையாகிப் பணிசெய்யும் காற்றே! 6

ஆற்றல் மிகுந்திடும் காற்றே!—நாளும்
அலுப்பின்றி அலுவல்கள் செய்கின்ற காற்றே!
தோற்றத்தைக் காட்டாய் என்றாலும்—உன்றன்
தொழில்கண்டு போற்றித் தொழுவோம் நற்காற்றே! 7

---




வான் தொட வளர்ந்த மலையிது காண்
வடிவில் பெரியதும் இதுவே தான்
மான் மயில் கூட்டம் மருவும் இந்த
மலை வளம் கண்டனையா தோழி ? 1

கன மழையிலும் இது கரையாது
கடுங் காற்றுக்கும் அசையாது
தினமிதைப் பார்க்கலாம் தவறாது
திடமாய் நிற்கும் சாயாது. 2

பரவிய கற்கள் பாறை புதர்
பலமரம் செடி கொடி மேல் வளரும்
அருவிகள் ஓடைகள் நீரூற்றின்
ஆறுகள் பிறப்பதும் இவ்விடமே. 3

ஆடுகள் மாடுகள் மேய்வதற்கும்
அருகில் காடுகள் நெருக்கம் பார்
வீடுகள் கட்டவும் மரம் கொடுக்கும்
வேண்டிய பொருளெல்லாம் கிடைக்கும். 4

ஓரிடமாயிது வீற்றிருந்து
ஊருக்கெல்லாம் உதவி செய்யும்
யாரிடமும் பகை கொள்ளாது
அகந்தை என்பதும் கிடையாது. 5

ஆகா ! இந்த மலை போல
அடக்கம் பெருமை யார்க்கு வரும்?
சாகா வரமிது பெற்றதுவோ?
சங்கடம் சலிப்பு இதற்குண்டோ? 6




நீல நிறக் கடலே—நெடு
நீர்ப் பரப்பின் கடலே
கோல நிலமகள் தான்—உடையாய்க்
கொண்டிருக்கும் கடலே. 1

நிலையில் பிரியாது—அடங்கி
நிற்கும் நிறைகடலே
அலையெனும் கைநீட்டி—மக்களை
அழைக்கும் அன்புக் கடலே. 2

தண்கடல் நீ நடத்தும்—விருந்தைத்
தான் உண்பவர் இருக்க
வெண்மணல் மெத்தையினை—விரித்தே
வேண்டி உபசரிப்பாய். 3

அழகு முழுமதியைக்—கண்டவுடன்
ஆசை அலை எழுப்பி
பழகும் நற்றோழி வந்தாள்—எனவே
பாடி மகிழ்ச்சி கொள்வாய். 4

பொங்கும் திரை கடலே—இந்தப்
பூமிக்கு மேலதிகம்
இங்கு நீ இல்லை என்றால்—மேகம்
எங்கிருந் துண்டாகும்? 5

வெப்பம் தணித்திடுவாய்—மன
வேற்றுமை நீக்கிடுவாய்
கப்பல் படகுகளை—நடத்தும்
கைத்தொழிலை வளர்ப்பாய். 6

இலகிடும் வெண்முத்து—மீனினம்
எல்லாம் விளை கடலே
பலகலை கற்றவர் போல்—உதவும்
பண்பு மிகும் கடலே. 7

வீட்டுக்கு வெளிச்சுவர்போல்—பயிர்
விளைவுக்கு வேலியைப் போல்
நாட்டுக்கோர் எல்லையாகும்—கடலே! உன்
நன்றியைப் போற்றுவோமே. 8

---

# தென்னை

காலையி லிருந்து வழி நடந்தேன்
கடும் வெயிலால் மிகவும் தளர்ந்தேன்
சாலையில் பல மரமும் கண்டேன்
தாகம் தணியாமல் நொந்தேன். 1

தென்னை உன்னைக் கண்டு வந்தேன்
சிரிக்கும் பாளை முகம் காட்டி
என்னை அன்பாய் வரவேற்று
இருக்க நல்ல நிழல் தந்தாய். 2

இன்னும் உன் இனத் தவரோடு
என்னைச் சூழ்ந்திட வேநின்று
வண்ணப் பச்சிலை ஓலைகளால்
வருத்தம் தீர உபசரித்தாய். 3



தமிழின் இனிமை யது போல
தாகம் தீர்க்கும் இள நீரை
அமிழ்தம் போலவே நீ தந்த
அன்பை என்சொல்லிப் புகழ்வேன். 4

மண்ணைத் தோண்டி உனை நட்டோர்
வாழ்வும் வளமும் பெருக வென
விண்ணை நோக்கித் தவம் செயவோ
மேலும் மேலும் வளர்கின்றாய். 5




எங்கள்வீட்டு வெள்ளைப்பசு
மிகவும் நல்லது
எப்பொழுதும் என்னிடத்தில்
பிரியம் உள்ளது. 1

ஊரிலுள்ள மாடுகளுடன்
போகும் மேயவே
உற்சாகமாய்த் திரும்பிவரும்
பொழுது சாயவே. 2

"அம்மா" "அம்மா" வென்று கன்று
அழைக்கும் நேரமே
ஆவலாகத் தாய்ப் பசுவும்
வந்து சேருமே. 3.

நல்ல சிவப்பு நிறமுடைய
சேங்கன்றுக் குட்டி
நாலு காலும் வெள்ளை நடு
நெற்றியில் சுட்டி. 4

கன்றுக்குட்டி ஊட்ட நின்று
மடி சுரக்குது
காலை மாலை வேளைக்கொரு
படி கறக்குது. 5

பால் தயிர் மோர் வெண்ணெய் நெய்
எல்லாம் கிடைக்குமே
பச்சைப் புல்லும் தவிடும் வைத்துப்
பசு வளர்ப்போமே 6

அன்பு மிக்க பசுவும் கன்றும்
அழகு வீட்டிற்கே
அதிக பயன் விளைக்குமிவை
நமது நாட்டிற்கே. 7




வாழைப் பூவைப்போல உடல்
　　வண்ணப்புறாவே!—உன்
வாய்திறந்து பேசுவாயோ
　　வண்ணப்புறாவே
ஏழையென்றும் செல்வரென்றும்
　　வண்ணப்புறாவே—உங்கள்
இனத்தில்வித்தி யாசமுண்டோ
　　வண்ணப்புறாவே. 1

நிறத்தில் வெவ்வேறாக இருந்
　　தாலும் புறாவே—உங்கள்
நிலையில்வேறு பாடுகாணோம்
　　ஏனோ புறாவே

மரத்தில் கூடுகட்டத் தெரி
யாதோ புறுவே—மேல்
மாடி வீடும் கோபுரமும்
தேடும் புறுவே. 2

"குடுகுடு"வென் சத்தமிட்டுக்
கொண்டு புறுவே—அந்தக்
கோபுரத்தை விட்டுக் கீழ்
குதிக்கும் புறுவே
"படபட"வென் சிறகடித்துப்
பறக்கும் புறுவே—என்
பக்கத்திலே வந்துட்கார
வேண்டும் புறுவே. 3

அழகு நடை பயிலுகின்ற
ஆசைப் புறுவே—உனது
அன்பினத்தைச் சேர்ந்து இரை
மேயும் புறுவே
பழகும் உங்கள் ஒற்றுமையும்
அன்பும் புறுவே—தினம்
பார்க்கும் எங்கள் மனிதருக்கும்
வருமோ புறுவே. 4




மரத்தின் மீது காகம்
மகிழ்ந்து பாடும் ராகம். 1

காலை தூக்கம் தெளியும் ;
"கா" "கா" என்று கரையும். 2

இனத்தை யெல்லாம் அழைக்கும் ;
இரையைத் தேடிப் பறக்கும். 3

சோறு பண்டம் வாரும்
சுறு சுறுப்பைப் பாரும். 4

செத்த எலியைத் தூக்கி
தெருவைச் சுத்த மாக்கி, 5

ஊருக் குதவி பண்ணும்.
ஒற்று மையாய் உண்ணும். 6

மாலையில் தினம் குளிக்கும் ;
மனையில் வந்தே படுக்கும். 7

கரிய காக்கை யினமே
கற்பிக்கும் நற் குணமே. 8

---




பால்போல் வெள்ளை நிறம்
படிந்திருக்கும் கொக்கே!

பறக்காமல் அங்கே யென்ன
பார்க்கிறாய் நீ கொக்கே! 1

நெட்டைக் காலும் நீளமூக்கும்
உள்ள வெள்ளை கொக்கே!

நெடுநேரம் ஒற்றைக் காலால்
நிற்பதேனோ கொக்கே! 2

தண்ணீர்க் கரை யோரத்திலே
தவக்கோலம் கொண்டு,

சலசலவென வெள்ளம் வரும்
திசையைப் பார்த்து நின்றே, 3

கண்ணை மூடி யிருந்தாலும்
கருத்தை மூடுவாயோ?

கரையோரம் வரும் பெரிய
மீனை விடுவாயோ. 4

தக்க மீனைக் கொத்தியதும்
தாவிப்பறக்கும் கொக்கே!

தவசிபோல இருந்த தெல்லாம்
தந்திரமோ கொக்கே! 5

---




**சிறுவன் :**

ஆலந்தளிரிலை போலும்-மேனி
அழகு பச்சைக் கிளியே!
பாலும் பழமும் தருவேன் வருவாய்
பவழ மூக்குக் கிளியே!

**கிளி :**

பாலும் பழமும் தருவா யெனினும்
பட்ச முள்ள சிறுவா!
மீளும்படியென்னை வானில் பறக்க
விடுவாயோ? சிறுவா!

சிறுவர் :

காட்டில் மேட்டில் பறந்து திரிந்து
கஷ்டப்படுவதும் ஏன்?
வீட்டில் கூட்டில் இருந்தால் உனக்கு
வேணதெல்லாம் தருவேன்.

கிளி :

சிறக்கும் உணவுகள் தந்தாலும் உன்
சிறை வாழ்வே வேண்டாம்
பறக்கும் எனக்குப் பழங்கள் கொட்டைகள்
பலப்பல கிடைக்கும் காண்.

சிறுவன் :

சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளாய்நீ
சுகப்பட மன மில்லையோ?
தின்பதையே தினம் தின்று பறந்து
திரிவதில் சலிப்பில்லையோ?

கிளி :

உண்ணும் உணவைத் தேடி உண்ணுதவா
உடம்பில் தெம்புண்டோ?
கண்ணும் கருத்தும் கையும் காலும்
கடவுள் படைத்ததும் ஏன்?

மரக்கிளைவீடு வான்வெளி வீதி
வையகம் என் நாடு.
வறுமை சோம்பல் அடிமையில்லாத என்
வாழ்க்கை யின்ப மயம்.

---

# மின்சாரம்




மின்சாரமே! ஓ மின்சாரமே!—உலகில்
மிக்க உபகாரி நீதான் மின்சாரமே. 1

உன் சாரம் உயர் மனிதன் மூளையாய்
உடல் நரம்பாவது கம்பிகளாய்
சொன்ன சொல் தட்டாமல் ஓடிவருவாய்
சுருக்காய்த் தொழில் எல்லாம் புரிவாய். 2

சேமிப்பு நிலையத்தில் தேங்கியிருந்து
தேவையானபோது எங்கும் சுற்றிச் சுழன்று
பூமிக்கு மேல்செல்லும் கம்பி வழியாய்
புகுந்துசென் றங்கங்கும் புதுமை செய்வாய். 3

எண்ணெய் திரிவகை ஒன்றும் இல்லாமலே
எரியும் விளக்குக் காற்றுண்ணுமலே
கண்ணைக் கவரும் ஒளி தருவாய்
காற்றையும் கைவிசிறிக் கொண்டு தருவாய். 4

ஓடும் ரயில்களை ஓட்டிச் செல்வாய்
ஒளியை ஒலியைப் பதிவு செய்வாய்
பாடும் இசைத்தட்டுப் படக் காட்சிப்
பண்ணைகள் வளரப் பணி செய்வாய். 5

இயற்கை நீர்வீழ்ச்சியின் தொடர்பு கொண்டாய்
எடிசன் அறிவில் நீ மலர்ந்தாய்
முயற்சிசெய் அறிஞர்களுடன் கலந்தாய்
முன்னேற்ற உலகத்தின் முன்பு வந்தாய். - 6




பெட்டி மேலே தட்டு ஒன்று
சுற்றுது பாராய்
பேசு வதும் பாடு வதும்
கேட்டிடச் சீராய்
எட்டி நின்ற சிறுவ ரெல்லாம்
கிட்டி வருகவே
இனிமை இனிமை என்று பாட்டை
அள்ளிப் பருகவே 1

ஒட்டிக் கொண்டு பெட்டிக் குள்ளே
ஒளிந்தி ருப்பதார் ?
ஊசி கொண்டு சுழன்று பாடும்
தட்டைக் கேட்டுப்பார்

தட்டி தற்குள் ஆளின் குரல்
மட்டும் இருக்குது
சாவி கொடுத்து வைத்தால் அது
தானே பாடுது. 2

பதிய ஒரு உருவைப் படம்
பிடிப்பது போல
பாடும் பேசும் ஒலிகள் பதியத்
தட்டதன் மேலே
அதிசயமாம் வித்தை இதனைக்
கண்டு பிடித்தவர்
அமெரிக் கராம் தாமஸ் ஆல்வா
எடிசன் என்பவர். 3

---




பாடும் ரேடியோ - பாட்டு
பாடும் ரேடியோ

பாரிலுள்ள செய்தி யெல்லாம்
ஊரிலுள் ளோர் தெரிந்து கொள்ளப் (பாடும்)

பாடும் பேசும் ஆள்கள் தம்மைப்
பக்குவமாய் அமர்த்தியே
பதிக்கும் அவர்கள் குரலை மட்டும்
பரவ வெளிப்படுத்தியே (பாடும்)

நல்ல நல்ல பாட்டுக் கதை
நாடகம் கச்சேரிகள்
சொல்லும் செய்தி விளக்கம் தினம்
தொடரும் நிகழ்ச்சிக் குறிப்புகள் (பாடும்)

அகில இந்திய வானொலி சென்னை
திருச்சி டெல்லி அமைப்பிடம்
சகல இடமும் செய்தி பரப்பும்
தானே வந்தெல் லோருக்கும் (பாடும்)

கம்பி யில்லாத் தந்திக்கு மேல்
கண்ட திந்தப் புதுமையே
அம்புவிக்குத் தந்தது இத்தாலி
அறிஞன் மார்க்கோனி திறமையே (பாடும்)

# வானவூர்தி



வான ஊர்தி பார்—தம்பி
வான ஊர்தி பார்.

வண்ணப் பறவை போலவே நாம்
எண்ணுமிடம் பறந்து செல்லும் (வான)

காடு மலை கடல்கள் தாண்டிக்
காற்றாய்ப் பறந்து செல்லலாம்
நாடு நகரம் சுற்றி ஒரே
நாளில் எதையும் பார்க்கலாம் (வான)

தண்ட வாளமீது ரயில்
சமுத்திரத்தில் கப்பல்கள்
கொண்டது போல் வானில் செல்லக்
கூடுமிந்த வாகனம். (வான)

உலகத் தோடு குலவும் வான
ஊர்தி இதனைக் கண்டவர்
இலகும் செல்வ அமெரிக்காவின்
"இரைட்" சகோதரர்களாம். (வான)

---




அன்னை உன்னைப் போற்றி செய்தோம்
அறிவும் திருவும் பெற அருள்வாய்—தமிழ்
(அன்னை)

முன்னைப் புவியினில் இடம் கொண்டாய்
மூவேந்தர்கள் மடியில் வளர்ந்தாய்—தமிழ்
(அன்னை)

“அகர முதல வெழுத் தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகெ”னும் நீதி
பகரும் திருக்குறள் பாலூட்டி
பண்பாய் அன்பாய் எம்மை வளர்த்திடும்
(அன்னை)

மொழிகள் யாவினும் முன்னணி நின்றாய்
முத்தமிழின் வடிவாக மலர்ந்தாய்
அழியா இளமை அழகு கொண்டாய்
அகமும் முகமும் மலரச் செய்வாய்—எங்கள்
(அன்னை)

எண்ணக் குறையா எழில் மிகு மணியே
எடுக்கக் குறையா தூறும் நவநிதியே
உண்ணக் குறையா விண்ணமுதே
உயிரே ஒளியே ஓவியமே—தமிழ் (அன்னை)

பொன்னைப் பொருளை விட மேலாய்
போற்றும் கல்விப் பொருளீவாய்
தன்னைப் போல் பிறரை மதிக்கும்
தன்மை நன்மை யெல்லாம் அளிக்கும்-தமிழ்
(அன்னை)






காந்தி மகாத்மா
காந்தி மகாத்மா—எங்கள்
கருத்தில் வந்து குடிபுகுவாய்
காந்தி மகாத்மா.
சாந்தம் அன்பு தவழும் முகக்
காந்தி மகாத்மா—உலகில்
சத்தியத்தை நித்தியமாய்க்
கண்ட மகாத்மா. 1

மன்னுயிரைத் தன்னுயிராய்க்
கொண்ட மகாத்மா—நாட்டில்
மக்கள் வாழ்வு மலர வாழ்ந்த
காந்தி மகாத்மா.

இன்னல் எவர்க்கும் செய்திடாத
இனிய மகாத்மா—நீ
எப்பொழுதும் எம்முடனே
இருப்பாய் மகாத்மா. 2

மனிதர்க்குள்ளே புனிதரான
காந்தி மகாத்மா—உன்
மலர் சிரிப்பால் மழலை யின்பம்
தந்த மகாத்மா.
இனிது எண்ணி இனிது செய்ய
எவர்க்கும் மகாத்மா—இளைஞர்
எங்களுக்குத் துணை வருவாய்
காந்தி மகாத்மா. 3

---








ஞால மீதிலே
நம்தமிழ் நாட்டின்
நல்லோர் குணங்க
ளுரைப்போம்;
சீலமுட னவர்கள்
செய்தபொதுப்பணி
சிறக்க நாளும்
உழைப்போம். 1








திரன் கட்ட பொம்மு—மண்
திடமிகும் தேசிங்கு
வீரசிதம்பரனார் தமிழ்க்குமரன
விடுதலைக் குரல் கேட்போம்—புகை
வென்றே புகழ் சேர்ப்போம். 2

நாட்டின் கவியரசர்—பாரதி
நாமக்கல் இராமலிங்கர்
பாட்டில் புரட்சிசெய் பாரதிதாசன்
பைந்தமிழ்க் கவி பயில்வோம்—நாம்
பகுத்தறிவே பெறுவோம். 3

அறியாமை இருளை—நீக்கிநல்
அறிவொளி தரும் அறிஞர்
பெரியார் திரு. வி. க. மறைமலை புகழ்
பெயர் சொல்லி வாழ்த்திடுவோம்—மன
பேதம் நீக்கிடுவோம். 4

அறிவாலயப் பணிக்கே—பொருள்
அள்ளி வழங்கியவர்
திருவளர் அண்ணாமலை பச்சையப்பன்
செய்த நன்றி மறவோம்—நாம்
செந்தமிழ்ப் பணிபுரிவோம். 5

---



# நாட்டு வாழ்த்து

வாழ்க வாழ்க நம் திருநாடு
வளமேவிட எந்நாளும் பாரில் (வாழ்க)

வாழ்க செந்தமிழ்க் கலைகள் தொழில்கள்
வண்மை நன்மை ஓங்கவே
வாழ்க மக்கள் இனிது வாழ்க
வறுமைத் துன்பம் நீங்கவே. (வாழ்க)

உண்மை அன்பு ஊக்கம் உடைமை
ஒழுக்கம் அறிவு வளர்கவே
திண்மை கொண்ட தீர வீரம்
சிறக்க நம்மில் பெருகவே. (வாழ்க)

கலக மதமும் கட்சிப் பகையும்
கபடும் சூதும் மாய்கவே
உலகம் மதிக்க நாம் எல்லோரும்
ஒரு குலமாய் வாழ்கவே. (வாழ்க)

மழை பொழிந்து பயிர் விளைந்து
மாநிலம் செழிக்கவே
உழைக்கும் மக்களாட்சி மலர
உரிமை வாழ்வு தழைக்கவே. (வாழ்க)



கழக வெளியீடு: ௬௭௧

# சிறுவர் உலகம்

[சிறுவர்க்கான தமிழ்ப் பாடல்கள்]



திரு. பு. ஆ. முத்துக்கிருஷ்ணன்
இயற்றியவை



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. சென்னை-1.

*First Edition*: *Nov.*, 1953.

[All Rights Reserved]

*Published by*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,
1/140, BROADWAY, MADRAS-1.

*Head Office* :

24, EAST CAR STREET, THIRUNELVELI.

Appar Achakam, 2/140, Broadway, Madras 1—C. 1000.

# பதிப்புரை

உலகில் பல்வேறு நாடுகள் பல்கியுள்ளன. ஒவ்வொரு நாட்டுப் பழக்க வழக்கங்கள் வெவ்வேறு; அவைகளை அறிய வேண்டுவது சிறுவர்கட்கு இன்றியமையாதது. அதிலும் பாட்டுவடிவில் அமைத்துக் கொடுத்தால் சிறுவர் உள்ளத்தில் கல்லின் மேல் எழுதிய எழுத்தெனப் பதியும்.

இக்கருத்தை உட்கொண்டு ஒவ்வொரு நாட்டின் பழக்கவழக்கங்களை எளிய இனிய நாட்டுப்பாடல்களில் அமைக்கச் செய்து 'சிறுவர் உலகம்' என்னும் பெயருடன் அச்சிட்டு வெளியிட்டுள்ளோம். இதனை ஆக்கித் தந்தவர், திரு. பு. ஆ. முத்துக்கிருஷ்ணன் அவர்கள்.

இந்நூலைச் செந்தமிழ்நாட்டு ஆசிரிய, மாணவர்கள் வாங்கிக் கற்றும், கற்பித்தும் நற்பயன் பெறுவார்களென நம்புகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை



# க. கொச்சிச் சிறுவன்

காலையில் எழுந்திருந்து
கட்டுமரம் ஏறிக்கொண்டு
கடலேறி மீன்பிடிப்போம்
நாங்களே—கொச்சி
கடற்கரையில் வந்துபாரும்
நீங்களே.

ஓலைக்குல்லாய் இடுப்புத்துண்டு
உடைகளாய் அணிந்துகொண்டு
உட்கார்ந்து கட்டுமரம்
தள்ளுவோம்—பானை
உணவை ஒருபக்கம் வைத்துக்
கொள்ளுவோம்.

வெப்பமாயிருக்கும் கடல்
விடியற்காலம் அப்பொழுதில்
மீன்களெல்லாம் துள்ளித் துள்ளி
மேல்வரும்—வலையை
வீசி வீசியே பிடிக்க
நிரம்பிடும்.

காலையில் புறப்படுவோம்
மாலையிலே காற்றடிக்கும்
வேளையிலே கரையை நோக்கித்
திரும்புவோம்—படகு
வீட்டருகே தெப்பம்விட்
டிறங்குவோம்.

மீன்களையும் விற்றுவிட்டு
மீதியை உலர்த்திவைத்து
வேண்டும் வெளியூர்களுக்
கனுப்புவோம்—ரெயிலில்
வெகுதூர இடங்களுக்கும்
ஏற்றுவோம்.

எங்களுடன் மீன்பிடிக்கும்
செம்படவச் சிறுவருடன்

எழும்பி எழும்பிக் குதித்து நீரில்
முழ்குவோம்—கடலில்
இறங்கி நீந்தி நீந்திவிளை
யாடுவோம்.

இந்தியாவின் மேற்குக்கடல்
எங்களது கொச்சிக்கடல்
இருக்கும் மலைகள் சூழ்ந்தஇடம்
ஆகுமே—மொழி
எங்களுக்குள் பேசும்
மலையாளமே.





# உ. படகர்

நீலகிரி மலைச் சாரலிலே—படகர்
நிலையாய் வசிப்பார்கள் கூரையிலே
மேலே கூரை சாமை வைக்கோலாலே—சின்ன
வீடுகள் சன்னல்கள் வைக்காமலே.

மலையில் காப்பித்தோட்டம் பயிரிடுவார்—படகர்
மாடு ஆடுகளும் மேய்த்திடுவார்
தலையில் முண்டாசு இடுப்பில் துண்டு—போர்வை
தம்மை மறைத்திட அணிவதுண்டு.

கையில் கழியுடன் குடையும் கொள்வார்—பெரியோர்
கண்ணியமாக வெளியில் செல்வார்
செய்யும் விவகாரம் தீர்த்துச்—சொல்வார்
கிராமத் திண்ணைகளில் கூடிப் பேசிடுவார்.

பெண்கள் கையில் வெள்ளிக் காப்பணிவார்—பச்சை
பிரியமாய் நெற்றியில் குத்திக்கொள்வார்
உண்ணும் உணவைப் பெண்கள் சமைப்பார்—அவர்கள்
உடம்பு குளிக்காமலும் இருப்பார்.

அடுப்புக்குமேல் பரண் போட்டிருப்பார்-தான்யம்
அவைகளின்மீதுதான் காய வைப்பார்
படிப்பில்லாமல் காலமே கழிப்பார்—சிறுவர்
பட்டி ஆடுமாடுதான் வளர்ப்பார்.





# ந. தஞ்சாவூர்ச் சிறுவன்

[கிளிக்கண்ணி]

சென்னை மாகாணத்தில் நம்
சிறந்த தமிழகத்தில்
பொன்னி யென்னும் காவிரி—நதியால்
புகழ்பெறும் தஞ்சாவூரே.

அந்தத் தஞ்சா வூருக்கும்
அடுத்த திருவையாறு
சுந்தர வாண்டை யார்க்கு—அங்கே
சொத்து மிகவும் உண்டு.

கழனியைச் சுற்றிப் பார்க்கும்
காவிரியில் குளிக்கும்
பழனி அவர் மகன்தான்—நித்தம்
பாடசாலைக்குச் செல்வான்.

வெளிச்சம் காற்றுக்குச் சன்னல்
வீட்டினுள் கூடம் வாசல்
வெளிப்புறம் தெருத் திண்ணைகள்—ஓடு
வேய்ந்ததாம் அவர்கள் வீடு.

நெல் அதிகம் விளையும்
நன்செய் புன்செய் நிலங்கள்
எல்லாம் ஆற்றுக்கால் பாய்ச்சல்—இடமே
இவர்கள் பயிர் செய்வதாம்.

மாடு வெள்ளாடு கோழி
வளர்த்துப் பயன் பெறுவார்
வீடுகளில் பெண்களே—சமையல்
விருப்ப மாய்ச் செய்திடுவார்.

பச்சைக் குதிரை பந்து
பம்பரம் விளையாட
இச்சையாய்ச் சென்றிடுவான்—பழனி
இளைஞருடன் மாலையில்.

சிறுமியர் கோலடிப்பார்
செந்தமிழ்க் கும்மிபாடி
நறுமலர் சூடிக் கொள்வார்—இவர்கள்
நடை உடை நம் போலவே.

---



## ௯. பல்லாரிச் சிறுவன்

பல்லாரி சில்லா வாசம்
பாரும் மேட்டுப் பிரதேசம்
எல்லாம் புன்செய் விளையும் கொல்லை
ஏனென்றால் மழை அங்கில்லை.

ஆழமான கிணறுகள் உண்டு
அதிலே தண்ணீரை மொண்டு
வாழும் குடியானவர் அங்கு
வயலுக்குப் பாய்ச்சுவார் நன்கு.

கரம்பில்லாமல் பயிராகும்
கம்புதினை கேழ் வரகும்
விரும்பும் உடை பருத்தி
விவசாயமும் விருத்தி.

ஆடுமாடு மேய்க்கும் சிறுவர்
அங்கே இருக்கின்றார்கள்
வீடுகளெல்லாம் குடிசை
விளங்கும் தெலுங்கு மொழி

கத்தரித்த ஆட்டுரோமம்
கைத்தொழில் கம்பளமாகும்
கைத்தறியைக் கொண்டு பெண்கள்
கருத்தாகவே நெய்வார்கள்.

பார்க்க நம் நாட்டில் மிகுதி
பல்லாரிக் கம்பளம் உறுதி
சேர்க்கும் ஆந்திர மாகாண
சில்லா பல்லாரி யாமே.





## ரு. இராசபுத்திரச் சிறுவன்

இந்தியாவின் வடமேற்கே
இரச புத்திரர்வாழ் இரசபுதனம்
அந்தஇடம் மலைக்குன்றுகளே
அடுத்தொருபக்கம் பாலைவனம்.

அருமழை பெயுமிடம் புல்வெளிகள்
ஆடுகள் மாடுகள் மேயுமிடம்
தரையில் கிணறுகள் வெகு ஆழம்
தானியம் பயிர்செய உபயோகம்.

கோட்டைகள் வீடாம் அதைச்சுற்றி
கோதுமை சோளம் விளையும் நிலம்
பாட்டையில் ஒட்டக வண்டிகளில்
பலரும் பிரயாணம் செய்வர்.

சுத்த வீரர்கள் ஆடவர்கள்
கத்தி கேடயம் ஆயுதங்கள்
மெத்தவும் அழகாம் பெண்களெல்லாம்
வீரமும் கற்பும் வாய்ந்தவர்கள்.

ஒட்டகம் ஆட்டுப் பாலுண்பார்
உரோமக் கம்பளம் நெய்திடுவர்
கிட்டும் சலவைக்க்ல் பொம்மை செய்து
எட்டும் ஊர்களில் கொண்டு விற்பர்.

அமர்சிங் ரசபுத்திர சிறுவன்
அனுதினம் பள்ளியில் பயின்றிடுவான்
தமது முன்னோரின் வீர மிகும்
சரித்திரக் கதைகள் பயின்றிடுவான்.

அழகிய பலவித உடையணிவான்
அமர்சிங் வீடும் கோட்டையில்தான்
பழகும் இந்தச் சிறுவன் போல்
பண்பும் வீரமும் பெறுவோமே.





## ௬. கல்கத்தாச் சிறுவன்

கங்கை நதி முகத்துவாரமே—வந்து
கல்கத்தா பட்டினம் பாருமே
அங்கு மெத்தை மாடி வீடுமே—பார்க்க
அழகான வீடுகள் யாவுமே.

சதுப்பு நிலம் நகர் சூழ்ந்திடும்—அதில்
சணலே அதிகம் விளைந்திடும்.
இதுப்புதுக் கோணிப்பை கித்தான்கள்—ஆக
ஏற்றும் சணல் நெசவாலைகள்.

கல்கத்தா சிறுவன் அங்கிருப்பவன்—அவன்
கருத்தாகப் பள்ளியில் படிப்பவன்
நெல்லரிசிச்சோறு ரொட்டியே—உண்பான்
நித்தமும் தேநீர் அருந்தியே.

சுத்தமிகும் வெண்மை ஆடையே—உடுத்தி
தோழர்களோடு குலாவியே
கத்தும் மோட்டார் ரயில் ஏறியே—புகைக்
கப்பலும் காண்பான் உலாவியே.

வருட முழுவதும் மழைபெய்யும்—கிராம
வயல்களில் நெல்லும் விளைந்திடும்
அறுவடையானதும் கிராமத்தார்—வந்து
ஆலைத்தொழில் செய்தும் சீவிப்பார்.

வங்காளிகள் வட இந்தியர்—அவர்கள்
வங்காள மொழியே பேசுவர்
தங்கள் பெரியோரைக் கண்டதும்—தலை
தாழ்ந்து வணக்கம் புரிவரே.





## எ. வங்காளச் சிறுவன்

[கும்மி]

வங்காளச் சிறுவன் வாழும ராணி கஞ்சு
வளப்பமது கேளும் பாலர்களே!
அங்கே நிலக்கரி ஆழச் சுரங்கங்கள்
ஆயிரம் மூவாயிரம் அடிக்கீழ்

அந்தச் சுரங்கத்தில் அந்தச் சிறுவனின்
அப்பாவும் அம்மாவும் வேலையாட்கள்
கொந்தாலி இரும்புக் கோடாரிகள் கொண்டு
கொத்தி எடுப்பார் நிலக்கரியே.

இவர்களைப் போலவே ஆண்களும் பெண்களும்
இந்த நிலக்கரி வேலை செய்வார்
தவறாமல் காலையில் ஏழுமணிச் சங்கு
சத்தம் கேட்டே வந்து சேர்ந்திடுவார்.

வெட்டும் நிலக்கரி தட்டுக்களில் வாரி
கொட்டி இரும்புக்கை வண்டிகளில்
முட்டில்லாமல் தள்ளிக்கொண்டுபோய் நாட்டுவார்
மொத்தமாய்ச் சேரும் கிடங்குகளில்

தோண்டும் நிலக்கரி ஏற்றிடவும் கீழே
சுரங்கத்தில் ஆட்கள் இறங்கிடவும்
வேண்டும் மின்சாரத்தின் கம்பிகள் கூண்டுகள்
மிக்க துணைசெயத் தக்கதுவாம்.

கப்பல் புகைவண்டி ஓடுவதற் குற்ற
காரணமான நிலக்கரியை
தப்பாமல் தோண்டி எடுப்பவர் சம்பளம்
சனிக்கிழமை தோறும் வாங்கிக் கொள்வார்.

வேலை செய்யும் தொழிலாளிகள் அன்றைக்கு
வீட்டில் விருந்துண்டு எக்களிப்பார்
மேலும் சிறுவர்க்கு மிட்டாய் தினுசுகள்
விரும்பும் உடை வாங்கித் தந்திடுவார்.

வாசிக்கும் வங்காளச் சிறுவர்கள் பள்ளியில்
வங்காள மொழியையே கற்றுக்கொள்வார்
நேசிக்கும் நமது நாட்டின் வங்காளிகள்
நிலைமை இதுவாகும் பாலர்களே.

---



## அ. அஸ்ஸாமியச் சிறுவன்

இவ்வுலகில் அதிக மழை
இந்தியாவில் அஸ்ஸாம்மலே
அவ்விடம் தேயிலேத் தோட்டத்தில்
—வேலேசெய்திடும்
அஸ்ஸாம் சிறுவன் நானே.

வீடுகளெல்லாம் நெருக்கம்
கூரை சரி வாயிருக்கும்
பாடுபடும் எங்களுக்கே—முதலாளிகள்
பாங்காகக் கட்டியவை.

தேயிலேச்செடி வளர்ந்தே
செழித்திடும் புதர்மிகுந்தே
காயும் வெயில் மழையைக் கொண்டே
—வளரும் பயிரிதைக்
கவனிப்பார் என் தந்தையார்.

மாலையில் சிறுவருடன்
வாசிக்கும் பள்ளிசெல்வேன்
காலையில் தேயிலை கிள்ளுவேன்
—அந்த இடத்திலே
வேலைசெய்வார் பெண்களுமே.

நீண்ட சிறு கூடைகளில்
நிரப்புவோம் தேயிலைகள்
மீண்டும் மீண்டும் தொழிற்சாலைக்கே
—ஏற்றியனுப்புவோம்
மின்சாரக் கூண்டுகளில்.

தேயிலையைப் பதப்படுத்தி
டப்பிகளிலே யடைத்து
தேவையான ஊர்போய்ச் சேரும்
—அந்தத்தேயிலைத்
தேநீர் உபயோகமாம்.





## ௬௰. காஷ்மீரச் சிறுவன்

காஷ்மீரச் சிறுவன் மாந்தன்
கதையைக் கொஞ்சம் கேளு ;
கட்டும் எங்கள் தெப்பவீட்டைக
இட்டே வந்து பாரு.

காடு மலைகள் பள்ளத்தாக்கு
கவிகள் புகழ்ந்து பாடும் ;
காணக் காண அழகு வாய்ந்த
காஷ்மீரத்தை நாடும்.

சீலம்நதி பாயும் நல்ல
ஸ்ரீநகர் என்னிடமே ;
சின்னச் சின்ன துண்டுகளாய்
இருக்கும் எங்கள் நிலமே.

வீட்டுக் கூரை மீதினிலே
புல் வளர்ப்போம் தம்பி
மிதக்கும் தோட்டம் ஏரிகளில்
விட்டு வைப்போம் நம்பி.

ஆப்பிள் பழம் வால் பேரிக்காய்
அதிகமாகக் கிடைக்கும்
அழகான புட்பத் தோட்டம்
அங்கு மிகப் பெருக்கம்.

கைவளையல் கால்களிலே
காப்பும் அணிந்து கொண்டு
காதுநிறைய நகையும் பெண்கள்
போட்டுக் கொள்வதுண்டு.

பயிரிடுதல் மரம் வெட்டுதல்
படகு தள்ளல் ஆண்கள் ;
பக்குவமாய்ச் சமைத்த பின்பு
பாவு நெய்வார் பெண்கள்.

நயமான கம்பளங்கள்
நாட்டமாக நெய்வோம்;
நாங்கள் இதைக் குளிருக்காக
நன்ருய் உடுத்திக் கொள்வோம்.

காட்டு மலைச் சாரலிலே
கரடி புலி மானே;
கூட்டமிதை வேட்டையாட
வருவார் சிலர் தானே.

வருடமுழுதும் பனியினுலே
மறைக்கும் மலைச் சிகரம்
வடமேற்கே நாங்களெல்லாம்
வாழ்கிறஸ்ரீ நகரம்.





# ௧௦. பர்மியச் சிறுவனும் இந்தியச் சிறுவனும்

பர்மியச் சிறுவன் :—

மாலை வாங்கலையோ-பூ
மாலை வாங்கலையோ

மாலை வர்ணக் காகிதப் பூ
வாடாத மாலை
வந்து காசுகொடுத்து வாங்கிச்
செல்வீர் இவ்வேளை.

**இந்தியச் சிறுவன் :—**

கடைத் தெருவில் காகிதப்பூ
விற்கும் சிறுவனே !—உன்
நடை உடையைப் பார்த்தால் எந்த
ஊர் தெரியேனே.

**ப - சி.** பர்மாவில் வசிப்பவன் நான்
பர்மியச் சிறுவன்
பரணைபோல வீடுகட்டி
வசித்து வருபவன்.

**இ - சி.** உங்கள் ஊரில் எல்லோருக்கும்
பரணை தான் வீடோ ?
எங்களைப்போல் வீடுகட்ட
ஏன் தெரியாதோ ?

**ப - சி.** பக்கம் மலைகாடு துட்ட
மிருகங்கள் பயமே
மிக்க உயர மானபரணை
வீடமைப்போமே.

**இ - சி.** பரணை வீட்டில் வாழுகின்றோம்
பர்மாவில் என்றாய்
பழக்கமான நடை உடை தொழில்
பாங்கெல்லாம் சொல்வாய் ?

*

பர்மியச் சிறுவா !—பதில்
விவரமாய் தருவாய்.

[கண்ணிகள்]

ப - சி. எங்கள் நாட்டு ஆண்களுக்கு
எஞ்சி சட்டை லுங்கி உடை
தங்கள் காலில் செருப்பணிந்தே
வெளியில் செல்வார்—பெண்கள்
தலை மயிர் உச்சியிலே
முடிந்து கொள்ளுவார்.

மூங்கில் குடையோடு பெண்கள்
தாங்கள் வெளியே வருவார்
நீங்கள் பார்க்கும் காகிதப்பூ
இந்த மாலையே—பெண்கள்
நித்தம் சமையல் முடித்துச்
செய்யும் வேலையே.

தேக்குமரக் காடதிகம்
செழிக்கும் பள்ளத்தாக்கு நிலம்
ஊக்கமுடன் பயிர்த் தொழிலும்
செய்திடுவோமே—அரிசி
உங்களுருக்கும் நாங்கள்
அனுப்பிவைப்போமே.

ஏறாத மலைகளிலே
இழுத்துவரும் யானைகளே
ஏராளமான தேக்கு
மரங்களை அறுப்போம்—மண்

எண்ணெய்க் கிணறுகளில்
எண்ணெயும் இறைப்போம்.
ஐராவதி ஆறும் உண்டு
அதிக உபயோகம்—அது

அரிசி மண்ணெண்ணெய் தேக்கு
அனுப்பவசதியே—எங்கள்
ஐராவதி உங்கள் கங்கை
போல உதவியே.

பௌத்த மதக் கோவில்கள் பார்!
பகோடா கோபுரம் பார்!
பௌத்தர்கள் நாங்கள் எல்லாம்
அறிந்துகொள் தம்பி!—புத்த
பகவனை அனுதினமும்
போற்றுவோம் நம்பி.

---



## கக. ஆர்டிக் சிறுவன்

[நொண்டிச் சிந்து]

ஆர்டிக் பிரதேசம்—வட
அமெரிக்காவின் வட கோடியதாம்.

அங்கு வாழும் எஸ்கிமோக்கள்—அவர்க்கு
ஆறுமாதம் பகல் ஆறுமாதம் இரவாம்.

குளிர் காலம் பனி வீடு—மற்றக்
கோடைக்காலம் தோல்கூடாரம் வசிப்பதற்கே.

"ஸீல்"மாமிசம் உணவாம்—கொழுப்புத்
தினம் பனிக்கட்டி வீட்டில் விளக்கெரியும்.

ரோமமுள்ள "ஸீல்" "வால்ரஸ்"—தோல்கள்
உபயோகமாம் படுக்கை ஆடைகளாய்.

"காயாக்" படகில் ஏறி—மீனுடன்
காணுகின்ற ஸீல் மிருகம் குத்தி இழுப்பார்.

"வால்ரஸ்" வேட்டை யாடுவார்—"சிலட்ஜு"
வண்டியில் சவாரி செய்வார் நாய்களைப் பூட்டி

இந்தவிதம் எஸ்கிமோக்கள்—சிறுவர்
இடத்தை அறிந்து கொள்வீர் படத்தைப் பார்த்தே.





## கஉ. லாப் லாந்தியர்

சூரியன் தோன்றா குளிர் பிரதேசம்
சூழும் பனி நாளும் வீசும்
சூழும் பனி நாளும் வீசும்
சொல்லும் லாப் லாந்தியர் வாசம்.

மேலணி சட்டை தோலுடை தொப்பி
வீடுகளும் தோல் கூடாரம்
வீடுகளும் தோல் கூடாரம்
மீன்மான் கறிதான் உணவாகும்.

தாவும் கடம்பை மான்கள் இழுக்கும்
சக்கர மில்லாத வண்டி
சக்கர மில்லாத வண்டி
சந்தோஷப் படகு வண்டி.

ஆண்டுகள் தோறும் புகையிலை காப்பி
வேண்டும் வரை வாங்கிக் கொள்வார்
வேண்டும் வரை வாங்கிக் கொள்வார்
வெளியூர் பிரயாணம் செய்வார்.

காறும் கடம்பை மான்கள் வளர்ப்பா
காட்டு ஓநாயைக் கொல்வார்
காட்டு ஓநாயைக் கொல்வார்
ஈட்டி ஆயுதமே கொள்வார்.

பாசி படர்ந்த பனிப் பிரதேசம்
பார்க்க மரம் செடி-கொடி யில்லை
பார்க்க மரம் செடி-கொடி யில்லை
பரவும் லாப்லாந்தியர் எல்லை.





## ௧௩. கர்க்கீஸ்

பூமி வடமேற்கே—ஸ்டெப்ஸ்
பச்சைப் பசும் புல்வெளி
ஆமிதிலே வசிப்போர்—கர்க்கீஸார்
ஆடுமாடு மேய்ப்போர்.

ஆடுமாடு குதிரை—ஒட்டகம்
ஆக்கமாக மதிப்பார்.
போடுவார் கூடாரம்—அவர்கள்
புல்வெளி கண்டவிடம்.

தோல் மரப் பாத்திரங்கள்—போகுமிடம்
தூக்கிச் செல்ல எளிதாம்
தோல் கூடாரம் அமைப்பார்—தண்ணீரை
தோல்பையில் வைத்திருப்பார்.

ஆட்டுப் பாலைக் குடிப்பார்—மாமிச
ஆகாரமும் புசிப்பார்
கூட்டமாய் மந்தைகளை—ஓட்டுவார்
குதிரை மீதேறி.

தங்கள் மாடு குதிரை—விற்று அதில்
தானியம் துணி மணிகள்
அங்கங்கே வாங்கிக் கொள்வார்—மேய்ச்சலிடம்
எங்கெங்கும் தேடிச்செல்வார்.

முட்டி விளையாடும்—குதிரைக்
குட்டிகள் சேங்கன்றுகள்
எட்டி எட்டி ஓடும்—சிறுவர்கை
கொட்டி மகிழ்ந்திடவே.



## கச. இங்கிலாந்துச் சிறுவன்

உலகில் மிகவும் பெரிதாம்—லண்டன்
ஒரு துறைமுக நகரம்
பலதொழில் செயும் மக்கள்—அங்கே
பரவி வாழுகின்றார்.

கடற் கரையில் வசிக்கும்—சிறுவர்
கப்பல் கட்டி விடுவார்.
படகில் ஏறிச் செல்வார்—நீரில்
பயமில்லை அவர்களுக்கே.

சட்டை தொப்பி பூட்ஸு—இவர்கள்
தரிக்கும் நல்ல உடுப்பாம்.
முட்டை மாமிசம் பால்—கோதுமை
முதல்தர உணவாகும்.

இயந்திர விவசாயம்—பண்டம்
இறக்கி ஏற்றும் தொழில்கள்
பயன்தரும் பசு வாத்துக்—கோழிப்
பண்ணைகள் சூழ் சிற்றூர்.

முன்புறம் பூஞ்செடிகள்—வீட்டுப்
பின்புறம் காய்கறிகள்
இன்ப தோட்டம் வயல்கள்—கிராம
இயற்கை காண வழகே.

பட்டின மத்தியிலே—தேம்ஸ்நதி
பாலம் கோபுரம் போல்
கட்டின அதிசயம் பார்—பாலம்
கப்பல் வர உயரும்.

புதுமையாக ரெயில்கள்—அங்கே
பூமியின் கீழ் ஓடும்.
மெதுவாய் மோட்டார் டிராம்—வண்டிகள்
மேல் வெளியில் செல்லும்.

மாளிகை கட்டிடங்கள்—பார்லிமென்
மண்டபம் மணிக் கூண்டு.
ஆளும் அரசர் குலம்—வாழும்
அரண்மனை பக்கிங்காம்.

கல்வி கைத்தொழிற்சாலை—மிருகக்
காட்சி நந்த வனங்கள்
பல்பொருட் காட்சியெலாம்—சிறுவர்
பார்த்துப் பார்த்து மகிழ்வார்.

இங்கிலாந்துச் சிறுவன்—ஜேம்ஸ்
லண்டனிலே வசிப்பான்
அங்குக் கல்வி கற்பான்—மொழி
ஆங்கிலமாம் அறிவீர்.





## ௧௫. சுவிட்ஸர்லாந்து மக்கள்

சுவிட்ஸர்லாந்து மக்களைப் பாரீர்—அவர்
தொழில்முறை யாதெனக் கேளீர்
தவறாமல் ஆடுமாடு வளர்ப்பார்—மலைச்
சரிவு புல்வெளியில் மேய்ப்பார்.

கோடை காலத்தில் மாடு—மேய்த்து
குளிர்காலம் திரும்புவர் வீடு
ஆடை ஆங்கிலேயர் போல—அவர்
அணிந்து கொள்வார் தம்மேலே.

பலமான கல்சுவர் வீடே—கூரை
பலமரக் கழிகளினாலே
அளவான வீடுகள் பலவும்—பின்னால்
ஆடுமாடு கட்டும் தொழுவம்.

பசுமாடு கறந்திடும் பாலே—அதில்
பால்கட்டி செய்து தின்பாரே.
பசியாற ரொட்டி மாமிசமே—அவர்
பழக்கமாக உண்பார் தினமே.

வளமானதாம் மலைநாடு—பலர்
வந்து தங்கும் ஏற்பாடு
குளிர்ச்சியான பிரதேசம்—இது
கோடைகால சுகவாசம்.

சறுக்கான பனிக்கட்டி ஏறி—மிகத்
தனிக்களிப்பாய் விளையாடி
இருப்பார்கள் பிள்ளைகள் கூடி—நாம்
இவர்நிலை அறிவோமே பாடி.





## ௧௬. பாலஸ்தீனச் சிறுமி

பாலஸ்தீனச் சிறுமி நானே—உள்ள
பட்டணம் ஜெருசலம் தானே
காலையில் எழுந்து கொள்வேனே—எங்கள்
கடவுள் எகோவைத் தொழுவேனே.

தண்ணீர் குடத்தில் கொண்டுவருவேன்—தாய்
சமையல் செய்ய உதவி புரிவேன்
அண்ணன் கிராமத்தில் ஆடுமேய்ப்பார்—என்
அப்பா இங்கே வர்த்தகம் செய்வார்.

நீண்டதொரு அங்கி மாட்டிக்கொண்டு—இடுப்பில்
நிற்க ஒரு கச்சையும் வரிந்து
மீண்டும் அங்கி தலைப்பாகை அணிந்து—தந்தை
வெளியில் புறப்படுவார் நன்கு.

அம்மா உடுத்திக்கொள்ளும் சேலை—சட்டை
அழகிய சித்திரப் பூ வேலை
அம்மாவின் உடைகளைப் போலே—நானும்
அணிந்து கொள்ளுவேன் இனிமேலே.

உண்ணும் கோதுமை அப்பம் ரொட்டி—நல்ல
ஒலிவப் பழம் திராட்சை அத்தி
இன்னும் பால்மாமிசம் உண்போம்—யூதர்
எல்லோரும் எங்கள் குலமென்போம்.

யூதர் கிறிஸ்துவர் முஸ்லீம்கள்—என
உரைத்திடும் மூன்று ஜாதியார்கள்
ஆதரவாய் வாழும் இந்தஇடமே—நாங்கள்
அனைவரும் போற்றும் புண்யதலமே.





# ௧௭. பாலைவனச் சிறுவன்

ஆப்ரிக்காவின் வடக்கில் சஹாரா
அகண்ட பாலைவனம்;
அங்குப் பார்த்தால் எங்கும் மணலே
அதிக வெப்பமப்பா!

பாலைவனத்தில் மூலை முடக்கில்
சோலைகளும் இருக்கும்;
பசுமையான அந்த இடத்தில்
வசிக்கும் முஸ்லீம்கள்,

ஒட்டகப்பால் வெண்ணெய் கோதுமை
ரொட்டி இவை யுண்பார்;
உயர்ந்து வளர்பே ரீச்ச மரத்தின்
பழங்களும் தின்பார்.

உண்பதற்கு முன்பு கடவுளை
உருக்கமாய்த் தொழுவார்;
உரோம சால்வை அவர்கள் போர்வை
உடைகள் மெல்லியவை.

கூட்டம் கூட்டமாய் வர்த்தகம் செய்யக்
கூடியே போவார்;
பாட்டுப்பாடித் துருவ ஒளியைப்
பார்த்து வழி நடப்பார்.

பாரம் சுமக்கும் வாரம் வரைக்கும்
வேண்டும் நீர் குடிக்கும்
பரந்த மணல்வழி நடக்கும் ஒட்டகம்
பாலைவனக் கப்பல்.

கொள்ளையடிக்கும் "தாரக்ஸ்" கூட்டம்
கொடிய புயல் காற்று,
தொல்லைகளுக்கு இடையில் இவர்கள்
தூரப் பிரயாணம்.

பார்லி கோதுமை விளையும் நிலத்தில்
பயிருமே செய்வார்;
பாலைவனத்துச் சிறுவன் குடும்பப்
பழக்கம் இவை தானே.

---



# கஅ. நீக்ரோ சிறுவன்

[ஆனந்தக் களிப்பு]

ஆப்ரிக்கா மத்தியபாகம்—உஷ்ணம்
அதிக மழை காடு மரங்கள் அநேகம்.

காடுகளில் சுற்றித் திரிவான்—சுத்தக்
கறுப்பு நிறமுள்ள நீக்ரோச் சிறுவன்.

சுருட்டைத் தலைமயிர் குட்டை—மிகத்
தோல் தடிப்பானது பாரும் உதட்டை.

மரக்கிளைக் குடிசையில் வசிப்பான்—மிருக
மாமிசம் காய்கனி கிழங்குகள் புசிப்பான்.

இலைகள் தழை உடையாகும்—கத்தி
ஈட்டி எலும்புகளால் உபயோகம்.

யானை சிங்கம் ஒட்டைச் சிவிங்கி—நீர்
யானைகளை வேட்டையாடுவான் நெருங்கி.

அவன்போல நீக்ரோக்கள் உண்டு—அங்கே
ஆடுமாடு பண்ணை நிலம் வைத்துக்கொண்டு.

பருத்திப் புகையிலைச் சோளம்—பயிர்
விருத்திசெய் நீக்ரோக்கள் விவரம் ஈதாகும்.





## ௧௧. பிக்மீக்கள்

குள்ள பிக்மீக்கள் கதை
        சொல்லப் போகின்றோம் இதை
கூர்ந்து கவனமாகக
        கேளும்! கேளும்!—ஐயா
சேர்ந்து பாடுவோம் நாங்கள்
        மேலும் மேலும்.

ஆப்பிரிக்கா கண்டமாம்
        அடர்ந்த காங்கோ வனமாம்
அதிக உஷ்ணப்பிரதேசம்
        ஐயா! ஐயா!—அங்கே
அந்த பிக்மீக்கள் வாசம்
        மெய்யாய்! மெய்யாய்!

கோடைவெயில் மறைக்கும்
குடிசை மரக்கிளை புல்
ஆடை இடுப்பில் ஒரே
துண்டு துண்டு—இவர்க்கு
ஆகாரம் காய்கிழங்கும்
உண்டு உண்டு.

காட்டெருமை கோரில்லா
வேட்டையாடி வருவார்
ஈட்டியும் அம்பும் கொண்டு
குத்தி குத்தி—அவர்கள்
எக்காளம் போட்டிடுவார்
சுற்றி சுற்றி.

ஆனையையும் அடிப்பார்
மானையுமே வதைப்பார்
ஊனையும் பச்சையாக
உண்பார் உண்பார்—பச்சை
மீனையும் அப்படியே
தின்பார் தின்பார்.

மான்கொம்பு யானைத்தந்தம்
மாமிசம் தோல்கள் விற்று
தான்மிக வாழைப்பழம்
கொள்வார் கொள்வார்—மற்றும்
சாமான்கள் வாங்கிக்கொண்டு
செல்வார் செல்வார்.

கல்வியில்லாத மக்கள்
காட்டில் வாழும் முரடர்
மல்யுத்தம்கூட செய்வார்
ஐயா ! ஐயா !—இவர்கள்
வாழ்க்கை நிலையிதுவே
மெய்யாய் மெய்யாய்.





## ௨௦. சிவப்பு இந்தியச் சிறுவன்

சிவப்பு இந்தியச் சிறுவன் நான்
சிறகு தொப்பி அணிவேன் தான்
உவப்புடன் தோல் உடைகளே
உடுத்துவேன் பாருங்களே.

கட்டும் தோல் கூடாரமே
காற்று வசதி யாகுமே
பட்டை நிறங்கள் பலவுமே
பார் முக்கோண வீடுமே.

பெண்கள் சமையல் பால்வெண்ணெய்
பிரியமான பால் கட்டி
உண்ணுவோம் பின் காய்கறி
உகந்து நாங்கள் தின்போமே.

ஆடுமாடு குதிரை கள்
அன்பாய் மேய்த்து வருவேனே
நாடும் குதிரை மீதிலே
நான் சவாரி செய்வேனே.

காட்டெருமை கலைமான் கறி
கலைத்த தோல் எலும்புகள்
வேட்டையாடிப் பெறுவோமே
மீன்பிடிக்கவும் செல்வோமே.

நாங்கள் சிவப்பு இந்தியர்
நல்ல சிவப்பு உயரம்பார் !
பாங்கின் வடக்கு அமெரிக்கா
பக்கம் வடமேற் காகுமே.



கழக வெளியீடு: உஅள

# கழகச் சிறுவர் பாட்டு

(3, 4-ஆம் வகுப்புக்கள்)



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

## திரு. வ. சுப்பையா அவர்கள்



## தமிழ்க்கவி ல. கு. கிருஷ்ணன் அவர்கள்



## அறிஞர் பலர் பாடியவை

# கழகச் சிறுவர் பாட்டு





## பாப்பா பாட்டு

பாப்பா பாப்பா வாவா
　　படுக்கை விட்டு வாவா
பூப்ப றிப்போம் வாவா
　　புள்ளொ லிப்போம் வாவா
தோப்பில் வீடு கட்டிச்
　　சோறு சமைப்போம் வாவா
கூப்பிட்டேன் நீ வாவா
　　கோல டிப்போம் வாவா. 1

# குழந்தையை எழுப்பல்

பொழுது விடிந்தது எழுந்திரு நீ
போந்தது சூரியன் எழுந்திரு நீ
தாமரை மலர்ந்தது எழுந்திரு நீ
தங்கிய தழகு எழுந்திரு நீ
கோழிகள் கூவின எழுந்திரு நீ
குளிர்ந்தஇப் பொழுதில் எழுந்திரு நீ
சோம்பல் ஒழித்தே எழுந்திரு நீ
துயரம் துறந்தே எழுந்திரு நீ 2

# காலையில் எழுந்திரு

காலை எழுந்திரு கருத்தாய்
கைகால் அலம்பித் திருத்தாய்
பல்லைத் தேய்ப்பாய் ஒழுங்காய்
பார்வைக் கிருக்கும் அழகாய்
பாடம் பார்த்துப் படிப்பாய்
பார்த்துக் கருத்தைப் பிடிப்பாய்
குளிர்ந்த நீரில் நீராடிக்
குணமாய் உடுப்பாய் வெள்ளாடை
தூய உணவே உண்ணுவாய்
தோன்று நோய்இதை எண்ணுவாய்

*

வேளையிற் பள்ளிக் கேகுவாய்
விஞ்சையில் வல்லான் ஆகுவாய்
ஆசான் சொல்லும் வண்ணமாய்
அழகாய் நடப்பாய் திண்ணமாய். 3

## என்னைப் பெற்ற என்தாயே!

என்னைப் பெற்ற என்தாயே
என்னை வளர்ப்பாய் அன்பாயே
கண்ணே மணியே என்பாயே
கட்டி முத்தம் தருவாயே



காலையில் எழுப்பி விடுவாயே
கடவுளை வணங்கச் செய்வாயே
பாலுஞ் சோறுந் தருவாயே
பாடஞ் சொல்லிக் கொடுப்பாயே

பள்ளிக் கனுப்பி வைப்பாயே
பாட ஆட விடுவாயே
பிணியால் வருந்தும் போதென்னைப்
பேணு முறையை என்னென்பேன்
ஈன்ற நின்னை மகிழ்விக்கச்
சான்றோன் எனப்பேர் எடுப்பேனே ! 4

## குழந்தாய்! அழவேண்டாம்

(" கிளிக் கண்ணி" மெட்டு)

அழுதால் பலம்குறையும்
அழுதால் நலம்மறையும்



அழுதால் பிறர்இகழ்வார்—குழந்தாய் !
அழுதால் ஆவதென்னே ?
அழகு முக அமைப்பை
அந்தக் கண்ணாடியில்பார்

*

அழுகை உன்முகத்தில்—குழந்தாய்!
அழகைக் கெடுப்பதைப்பார்.
அழுதல் கோழைதொழில்
அழுதல் கசடர்தொழில்
அழுதல் அழகாமோ—குழந்தாய்!
அழுதல் நமக்கேனோ?
ஈக்கள் அழுவதில்லை
எறும்பும் அழுவதில்லை
பூக்கள் அழுவதில்லை—குழந்தாய்!
போதும் அழவேண்டா
குருவி அழுவதில்லை
குரங்கும் அழுவதில்லை
உருவம் குலைந்தழுதால்—குழந்தாய்!
உரமும் குலைந்துபோகும்
அயர்ச்சி அழுகைதரும்
அதனை ஒழித்துவிடு
முயற்சி திரு ஆக்கும்—குழந்தாய்!
முயற்சி தனை ஆள்வாய், 5

## எங்கள் கடமைகள்

காலையில் எழுவோம்—நாளும் நாம்
கடவுளைத் தொழுவோம்—நம்பி நாம்
இசையாய்ப் பாடுவோம்—நாளும் நாம்
இனிமை பெறுவோம்—நம்பி நாம்

பல்லைத் துலக்குவோம்—நாளும் நாம்
பாங்காய் விளங்குவோம்—நம்பீ நாம்
பயிற்சி செய்வோம்—நாளும் நாம்
பலத்தைப் பெறுவோம்—நம்பீ நாம்
கல்வி கற்போம்—நாளும் நாம்
களிப்பை அடைவோம்—நம்பீ நாம்
உணவை உண்போம்—நாளும் நாம்
உரமாய் வளர்வோம்—நம்பீ நாம்
பள்ளிக்குச் செல்வோம்—நாளும் நாம்
படிப்பைப் போற்றுவோம்—நம்பீ நாம்
நண்பகல் ஓய்வு—நாளும் நாம்
நலமாய் உறுவோம்—நம்பீ நாம்
பசித்தால் புசிப்போம்—நாளும் நாம்
பலநோய் ஒழிப்போம்—நம்பீ நாம்
மாலையில் வீடு—நாளும் நாம்
மகிழ்ந்து திரும்புவோம்—நம்பீ நாம்
அறிவை வளர்ப்போம்—நாளும் நாம்
அன்பாய் வாழ்வோம்—நம்பீ நாம். 6

## நல்லுரை

நாயைக் கல்லால் அடிக்காதே
நகத்தைப் பல்லால் கடிக்காதே
கிட்டாப் பொருளை விரும்பாதே
கெட்ட வழியில் திரும்பாதே

அழுக்கு நீரில் ஆடாதே
ஆடி நோயால் வாடாதே
பசியா முன்னம் புசியாதே
பலவாம் நோயால் நசியாதே
வீண்விளை யாட்டில் மகிழாதே
வேண்டுஞ் செயலில் நெகிழாதே
சோம்பல் கொண்டு திரியாதே
துன்பம் எதற்கும் புரியாதே
தீயோர் சொல்லைக் கேளாதே
தீமை யடைந்து மாளாதே
இரவில் தனியாய் ஏகாதே
என்றும் இச்செயல் ஆகாதே
பெரியோர் சொல்லைத் தட்டாதே
பேச்சுக் கெதிரே முட்டாதே
ஆசான் சொல்வதை மறவாதே
மறந்தால் ஒன்றுஞ் சிறவாதே
இதுவே உனக்கு நல்லுரையாம்
இசைத்த வண்ணம் நில்லுவையாம். 7

# எலியைப் பிடி, பூனை!

("சின்னச் சின்ன எறும்பே" என்ற மெட்டு)

மீயாம் மீயாம் பூனை
 மேலே உள்ள பூனை
பாயும் பெரிய பூனை
 பக்கத் தில் வா பூனை



பா லு னக்குத் தருவேன்
 சோ று னக்குத் தருவேன்
காசு னக்குத தருவேன்
 காரி யஞ்செய் பூனை

வீட்டில் எலி எடுத்து
வேட்டி களைக் கடித்துப்
போட்டது நீ பிடித்துப்
புசித்து விடு பூனை
நெல்லைக் கொண்டு சென்று
நீண்ட வளையில் தின்று
தொல்லை செய்யும் இன்று
துரத்தி விடு பூனை
பிள்ளை களைக் கடிக்கும்
பிளேககு நோயைக் கொடுக்கும்
உள்ளே வளை எடுக்கும்
ஓட்டி விடு பூனை. 8

## மர நாய்

கந்தன் வீட்டில் நாயொன்று
கண்டால் அழகில் மிகநன்று
வாயைத் திறந்து குலைக்காது
வாலை யாட்டிக் குழைக்காது

திறந்த கண்கள் மூடாமல்
திருடர் வீட்டில் நாடாமல்
காவல் நன்றாய்ப் புரியும்
கண்டால் ஓடும் நரியும்



இழுத்தா லன்றிப் போகாது
எந்த நாளுஞ் சாகாது
என்றும் அதனால் பயமேயாம்
என்றாலும் அது மரநாயாம். 9

## மழை

மழையே மழையே வாராய்
வந்து பெய்வாய் சீராய்
ஆறு குளங்கள் நிரப்பு
போன வளங்கள் திருப்பு
பச்சைப் புல்லை வளர்ப்பாய்
பாரெல் லாம்நெல் அளிப்பாய்
பருகும் உணவும் நீயானாய்
பண்ணும் உணவில் நீரானாய்
காட்டில் மகிழ்ச்சி உன்னாலே
கடலில் உயர்வு உன்னாலே
எல்லாம் செய்வாய் ஆனாலும்
எதுவும் வேண்டாய் எவர்பாலும்
உன்றன் குணத்தைப் போலே
உண்டோ உலகின் மேலே. 10

## தாமரை

தாமரையே தாமரையே
தனியழகாந் தாமரையே
மலர்களுக்குள் அரசெனவே
வயங்குமெழில் தாமரையே

சேற்றிடைநீ மலர்ந்தாலும்
தேவர்முடிக் கணியாவாய்
குலமகளின் குணங்கொண்ட
கொழுமலரே தாமரையே



கலைமகளும் விரும்பியமர்
கட்டிலும் நீ தாமரையே
திருமகளின் வீடென்றே
சிறந்திருக்குந் தாமரையே
திருமகளின் திருவருளைத்
தேடித்தா தாமரையே. 11

## பசுமாடு

எங்கள் வீட்டுப் பசுமாடு
என்றும் நல்ல இயல்பினதாம்
சின்னஞ் சிறிய குழந்தைகளும்
சேர்ந்தால் துன்பஞ் செய்யாது
பச்சைப் புல்லை வயிறுரப்
பரிவாய் மேய்ந்து ஓரிடத்தில்

அமைதி யாகப் பயமின்றி
அமர்ந்து மெதுவாய் அசைபோடும்

தூய நீரே பருகுமொரு
துகளில் லாத சீர்த்தியதே



முதல்மா ணாக்கர் குணம்போல
முதலாய் நடக்கும் இனமிதுவே

கள்ளம் இல்லாப் பார்வையதாம்
காணக் காண அழகியதாம்

எங்கள் பசுவின் குணம்போல
எங்கும் எதுவும் கிடையாதே. 12

## கணக்குப் பாடல்

ஒன்று யார்க்கும் உடல்ஒன்று
இரண்டு யார்க்கும் கையிரண்டு

மூன்று தேங்காய்க் கண்மூன்று
நான்கு நாய்க்குக் கால்நான்கு

ஐந்து ஒருகை விரல் ஐந்து
ஆறு வண்டின் கால் ஆறு

ஏழு வார நாள்ஏழு
எட்டு உடம்பின் சாண்எட்டு

ஒன்பது கோள்கள் ஒன்பஃது
பத்து இருகை விரல்பத்து. 13

## நான் விரும்பும் ஆறணா!




நான் விரும்பும் ஆறணா! நல்ல சின்ன ஆறணா!
நான் விரும்பும் ஆறணா! என்னின் இனிய ஆறணா

செலவுசெய்தேன் ஓரணா இன்னுஞ்செய்தேன்ஓரணா;
நின்ற மீதி நாலணா, வீட்டிற் கொடுத்தேன் நாலணா.




ஓ! எனது நாலணா! நல்ல சின்ன நாலணா!
நான் விரும்பும் நாலணா! என்னின் இனிய நாலணா!
செலவுசெய்தேன் ஓரணா; இன்னுஞ்செய்தேன் ஓரணா;
நின்ற மீதி இரண்டணா, வீட்டிற் கொடுத்தேன் இரண்டணா.




ஓ! எனது இரண்டணா! எனது சின்ன இரண்டணா!
நான் விரும்பும் இரண்டணா! என்னின் இனிய இரண்டணா!
செலவு செய்தேன் ஓரணா; இன்னுஞ் செய்தேன் ஓரணா;
கையில் இல்லை யேஅணா; கொடுக்க இல்லை யேஅணா! 14



# நமது நாடு

நாடு நாடு நம்நாடு
நமது நாடு தமிழ்நாடு

புலவர் போற்றும் பொன்னாடு
புண்ணிய மெல்லாம் புகுநாடு

மூவர் ஆண்ட முதல்நாடு
மூன்று தமிழ்கள் வளர்நாடு

கற்பும் பொற்பும் மிகுநாடு
கருத்தின் செம்மை தகுநாடு

நால்வர் பாடல் தவழ்நாடு
நாலா யிரமும் எழுநாடு

தொல்காப் பியநூல் பெறுநாடு
தூய திருக்குறள் உறுநாடு

அன்பு விளங்கும் தவநாடு
இன்பம் துலங்கும் எழில்நாடு

சங்கம் வளர்ந்த தனிநாடு
சான்றோர் மிகுந்த நன்னாடு. 15

# அழுதவன் சிரித்தான்

அரசு என்றொருவன்
அன்பான பையன்

தாமரைப் பூப்போலத்
தன்முகத்தின் அழகு

அம்மா அடிக்கவே
அழுதுகொண்டு போனுன்

இளங்கன்று ஒன்று
இன்பமாய் ஓடித்

துள்ளி விளையாடத்
தூரத்தில் பார்த்தான்

வெட்கித் தலைகுனிந்தான்
வீணுய் அழமாட்டேன்

நானும் அதைப்போல
நன்ருய் விளையாடி

நாள்தோறும்படித்து
நல்ல பெயர்எடுப்பேன்

என்றே சிரித்துமிக
இன்பமாய்த் திரும்பினுன். 16

# என் கதையைக் கேளுங்கள்

பிள்ளைகளே பிள்ளைகளே
என் கதையைக் கேளுங்கள்
எடுத்துரைப்பேன் கேளுங்கள்
பருத்திவிதை யாயிருந்தேன்
பண்பட்ட கருநிலத்தில்
உழுவன் விதைத்துவிட
உயிர்செடியாய்ப் பூப்பூத்தேன்
என்னை எடுத்தொருவன்
அடித்துச் சுத்தமாக்க
இராட்டினம் கொண்டொருவன்
சுழற்றிச் சுழற்றிவிட்டான்
நூலெனவே பேர்பெற்றேன்
நூறுகல் நீளமானேன்
நேராக ஒருவன் வாங்கி
நெய்தான் அகலமானேன்



அங்கே ஒருவன் வந்தான்
அடுக்கடுக்காய் வாங்கிச் சென்றான்
அவனிடம் நீங்கள் வாங்கி
அழகான ஆடைஎன்றீர்
இதுவேஎன் கதையாகும்
இதை நீங்கள் மறக்கவேண்டாம். 17

# தென்னையும் பனையும்

பனைமரமே! பனைமரமே!
பாடற்ற பனைமரமே!
எனையடுத்து நீயிருக்க
ஏற்கும்மோ பனைமரமே!



என்னிடமுந் தேனுண்டு;
உன்னிடமுந் தேனுண்டு;
உன்னுடனே யானிருக்க
ஒவ்வாதோ தென்னையே!

என்தேனை எல்லோரும்
ஏற்றுண்பர் நோய்தீர;
உன்தேனை உண்போர்கள்
உடல்கெடுவார் பனைமரமே!

என்தேனுற் சாறுண்டாம்
எல்லோர்க்கும் குளிர்ச்சிதரும்;
உன்தேனுற் சூடுண்டாம்
உணராயோ தென்னையே!

வேணுமென்று இளநீரை
வேனிலிலே உண்பார்கள்;
நாணிலியே! பனஞ்சாறு
நண்பகலிற் புளிப்பேறும்!

பனங்காயின் நுங்கதனைப்
பதங்கண்டு அரிந்துண்ண
இனங்கொண்ட மானிடர்கள்
எனைத்தேடி வருவார்கள்.

இளநீரே யல்லாமல்
இளங்காயின் வழுக்கையுண
வளமாகும் எனக்கொண்டு
வருவார்கள் என்னிடமே.

என்வித்தின் மூளைக்கிழங்கை
எல்லோரும் சுட்டுண்டார்;

உன்வித்திற் கிழங்குண்டோ !
உற்றதனை யறியாயோ ?

என்வித்தோ நெய்யாகும்
எரிபுண்ணை ஆற்றுவிக்கும்;
உன்வித்தில் நெய்யுண்டோ !
உணராயோ நாணிலியே !

ஏரிகரை யுடையாமல்
ஏறுவெள்ளம் யான்காத்து
ஊரிலுள்ள வயல்களுக்கு
உற்றதுணை யாகுவேன்.

ஊரிலுள்ள தெருக்களிலே
உனைத்தேடி வைப்பாரோ !
பாரிலுள்ள தடியர்களைப்
பனைமரமென் றிகழாரோ !

ஆணென்றும் பெண்ணென்றும்
அன்புண்டு எங்களுக்குள்;
ஆணலை நீ பெண்தானே !
அறிவாய்நீ அறிவிலியே !

ஆண்பெண்கள் மணக்கின்ற
அழகான பந்தலிலே
காண்பாரோ உன்னைலே
கால்களுக்கு அழகுசெய !

# வெற்றிவேல் முருகன்

வெற்றிவேல் முருகன்
வேலிதாண்டிக் குதித்தான்
வெற்றிவேல் முருகன்
வீடுஓடி வந்தான்
வெற்றிவேல் முருகன்
வேலமரத்தில் ஏறினான்



வெற்றிவேல் முருகன்
வேர்த்துக்கீழே குதித்தான்
வெற்றிவேல் முருகன்
சுற்றிச்சுற்றித் திரிந்தான்
வெற்றிவேல் முருகன்
சுற்றிச்சுற்றித் திரிவதேன் ?

என்கால்கள் கைகளும்
எங்கெங்கும் நாடுதே !
ஒன்றைவிட்டு ஒன்றுசெய்ய
ஓயாமல் ஓடுதே
என்னசெய்வேன் இதற்குநான்
என் அருமைத் தோழனே. 19

## நாம் எதற்கும் அஞ்சோம்

நாம் எதற்கும் அஞ்சோம்
நாம் எதற்கும் அஞ்சோம் !



பேரிடியே இடித்தாலும்
பெருமழையே பெய்தாலும்
நாம் எதற்கும் அஞ்சோம்
நாம் எதற்கும் அஞ்சோம் !

கடலேபொங்கி வந்தாலும்
காற்றேகடுகி அடித்தாலும்
நாம் எதற்கும் அஞ்சோம்
நாம் எதற்கும் அஞ்சோம்!
ஞாயிறுமிகவே எறித்தாலும்
நானிலமெங்கும் அதிர்ந்தாலும்
நாம் எதற்கும் அஞ்சோம்
நாம் எதற்கும் அஞ்சோம்!
எல்லாம் இயக்கும் எம்பெருமான்
எம்முள் இருக்கும் போது
நாம் எதற்கும் அஞ்சோம்
நாம் எதற்கும் அஞ்சோம்!

## சின்னஞ் சிறிய செடி

(விதை முளைத்தல்)



சின்னஞ் சிறிய
குழந்தை—நான்
சிறியதோர் விதையினுள்
உறங்கியிருந்தேன்
பூமியில் ஆழத்தின்
உள்ளே—வெகு
பொறுமையாய் உறங்கிய
என்னையும் தட்டிக்
கதிரவன் 'எழுந்திரு' என்றான்—'வெளிக்
காட்சி அழகினிக் காண்க' என்றான்

மழைத்துளி நண்பனும் என்னை—மிக
மகிழ்வுடன் 'எழுந்திரு' என அழைத்தான்
கண்கள் விழித்தெழுந் தேனே—நான்மேல்
கண்டவிநோதங்கள் என்னசொல்வேனே.
(சின்னஞ் சிறிய குழந்தை)

## கதிரவனும் சிறுவனும்

கதிரவனே ! கதிரவனே !
காலையில் எழுந்தாயே
களித்து யாங்கள் ஆடும்போது
கடிதினில் மறைந்தாயே.
மின்னும் சிறிய விண்மீன்களை
வெருட்டி ஓட்டினாயே
இன்னும் வட்டச் சந்திரனை
எங்கோ மறைத்தாயே.
உறங்கப்போனாய் இப்போது
ஓடிஎப்படி வந்தாய் ?
உரைப்பாய்இரவில் தங்கியிருந்த
உனதிருப்பிடம் நன்றாய்.
உறங்கவில்லை தங்கவில்லை
உலகத்தைச்சுற்றித் தானே
ஓடிவந்தேன் கிழக்கேசிறுவர்
உளமகிழ்ந்திடத் தானே.

பறவைமிருகம் மலர்கள்வழியில்
பட்டயாவும் இன்னும்
படுத்துத்தூங்கும் சிறுவரையும்
பார்த்துஎழுப்ப வந்தேன்.



உயரும்ஒருவன் சோம்பிக்கிடக்க
ஒண்ணுமோ நீ சொல்லாய்
உலகில்யாணும் உறக்கமென்ப
துணரேன்அரிய பிள்ளாய். 22

## குப்பன் சீரானது

குப்பன்என்னும் சிறுவன்
குளிக்காமல் திரிவன்
காடும்மேடும் அலைவான்
கண்டஇடமும் புரள்வான்

பூனை ஒன்றைக் கண்டான்
'போவோம் ஆட' என்றான்
பூனை அவனைச் சீறி
'போ போ மேடு ஏறி
அங்கே உனக்கு நண்பர்
அகப்படுவார்' என்ன



அந்தச் சொல்லைக் கேட்டான்
அவனும் ஓடிப் பார்த்தான்
குட்டை ஒன்றில் பன்றி
குழம்புச் சேற்றில் நன்றாய்
படுத்திருக்கக் கண்டான்
அடுத்துப் பக்கம் சென்றான்

தம்பி ! வாவா ! நாமே
தங்கி ஆட லாமே

என்னைப்போல நீயே
எழிலாய்இருக்கின் றுயே

துணியும்உடம்பும் முழுதும்
தோய்ந்திருப்பது அழுக்கே

என்றுபன்றி கூற
இவனும் வெட்கம்மீற

ஓ ! ஓ ! நீயோ அண்ணன் ?
உடனேபிரிவேன் திண்ணம்

என்றுகூற ஏகினுன்
அன்றேதூயன் ஆகினுன். 23

## என் சொந்த ஊர்

'பள்ளிக்கூடம் மூடினுர்
பாலர் யாரும் ஓடினுர்

சொந்த ஊரைப் பார்க்கவே
தோன்றும் ஆசை யார்க்குமே

நானும் மெயிலில் ஏறினேன்
இரயிலின் வேகம் என்சொல்வேன்

டகட டகட எனஇரயில்
தாளம் அதிரஓடுது !

நின்ற யாவும் தொடருதே
நிமிடம் அவைகள் மறையுதே
என்றன் சொந்த ஊரதோ
முந்தி ஓடி வந்ததே
உண்ணத் தாகம் போக்கிடும்
தென்னந் தோப்பும் நோக்கிடும்!
நான் இருந்து ஆடின
மா மரங்கள் நாடின



நான் குதித்து நீந்தின
மீன் நிறைந்த கிணறிதோ
நல்ல கிணற்றின் ஒவ்வொரு
கல்லும் என்னை அறியுமே
என்றன் தோழர் அங்ஙனே
இனிது ஆடுகின்றனர்
நானும் அவரைச் சேரவே
இரயிலும் வந்து சேர்ந்ததே! 24

# இரும்பை எலி தின்றது

செட்டி ஒருவன் இடத்திலே—சில
கெட்டி இரும்புத் துண்டை வைத்தே
போய்வந்து இரும்புகளைக் கேட்டேன்—செட்டி
"போ! போ! இரும்பை எலி தின்ற"தென்றான்



ஒருநாள் அவன்மகன் வெளியே—வர
மறைவில் இருத்தினேன்; செட்டியும் வந்தே
'பிள்ளையைக் கொடு' என்றான்—'அவனைப்
போ! போ! பருந்தெடுத்துச் சென்ற'தென்றேன்

மிக்க கடுஞ்சினத் தோடே—மன்றில்
மேவி விசாரணை செய்ய இழுத்தான்

அங்கே நீதிபதி முன்னே—ஐயா !
அநியாயம் இவன்சொல் அடியேன் சொல்வேன்

இரும்பை எலிதின்ற தென்றான்—இன்று
மகனைப் பருந்தெடுத் தோடிய தென்றேன்

நீதிபதியும் வியந்து—முன்னே
நிகழ்ந்தது கேட்டு இரும்பினை வாங்க

நானும் மகனைக் கொடுத்தேன்—இந்த
நீதியாம் தீர்ப்பும் மிகநன்று தானே ! 25

# யானை கண்ட குருடர்

ஈரிரு குருடர் யானையை அணுகினர்
ஒவ்வொரு குருடனும் ஓரிடம் தொட்டனன்
காலைத் தொட்டவன் கம்பம தென்றான்
வாலைத் தொட்டவன் விளக்குமா றென்றான்
வயிற்றைத் தொட்டவன் வண்மிடா வென்றான்
செவியைத் தொட்டவன் செம்முறம் என்றான்
நால்வரும் யானையின் நாற்குணம் கூறிக்
கோல்கொண் டோங்கிக் கொடுஞ்சமர் புரிந்தனர்
அவ்வழிச் சென்ற அறிஞன் ஒருவன்
எவ்விதம இப்போர் எழுந்ததென் றறிந்து
"அன்பர்காள் நீவிர் ஆனையைக் காண்கிலீர்

பின்பதன் அவயவம் பிறிதாய்க் கண்டேர்
அவயவம் தனித்தனி ஆனையு மாகா
அவயவம் எல்லாம் ஆனையே ஆகும்"
எனமொழி கேட்டு ஏக்கம் நீக்கினர்
இனமொழி யாகும் ஈசனை அறிதலும். 26

## தாகத்தால் அலைந்த காக்கை

தாகத்தாலே காக்கையொன்று
தவித்து அலைந்ததே
தண்ணீர்எங்கும் அகப்படாமல்
தன்மை இழந்ததே.



பறந்துபறந்து இறகுசோர்ந்து
இறங்கு முகத்திலே
பார்த்ததேலோ பெரியவீட்டின்
வாசல் நடுவிலே.

சாடிஒன்றின் அடியிற்கொஞ்சம்
நீரிருந்ததே
தாவித்தாவி வாய்எட்டாமல்
தாகம் மிகுந்ததே.

பக்கத்திலே கிடந்தகற்கள்
தம்மைப் பொறுக்கியே
பக்குவமாய்ச் சாடியுள்ளே
போடத் திட்டமாய்த்

தண்ணீர் சாடி வாயிலண்டை
வந்து நின்றதே
தாவிக்குடித்துக் காக்கையன்று
தாகந் தீர்ந்ததே
எந்தச் செயலும் உத்திகொண்டு
இனிது முடிக்கலாம்
என்றும் எங்கும் விடாமுயற்சி
இன்பம் ஆக்குமே.

27

## மலை தூக்கி

ஆறு மாதம் வரையிலும்
சோறு போடு வீரெனில்



எவரும் மகிழ மலைதனை
எடுப்பேன்' என்றான் ஒருவனே

என்ற அவனைச் செல்வனும்
நன்று கொழுக்க வைத்தனன்
மலையை எடுக்கப் போகுநாள்
மனிதர் பார்க்கக் கூடினர்
யாரும் சூழ்ந்து நிற்கவே
சூரன் வந்து சொல்லுவான்
மலையை எடுக்க நான்தயார்
தலையில் தூக்கி வையுங்கள்
என்று சொல்ல யாவரும்
நின்று தயங்கிச் சென்றனர். 28

## ஆடும் நரியும்

(இங்கிலீஷ்—கோட்டு)

வழியில் சென்ற நரியொன்று
வழுக்கிக் கிணற்றில் விழுந்திடவே
குழியில் இருந்து கரையேறக்
கூடா மையினல் வருந்தியதே.
கால்கள் உதைத்துப் பெருமூச்சும்
கதறிவிடுத்துத் தலைமட்டும்
மேலே வைத்துப் படிபார்த்து
விழித்துக் கொண்டே யிருந்ததுவே.
தண்ணீர்த் தாகம் கொண் டாடு
தலையை நீட்டிச் சலம்நோக்க
கண்ணிற் பட்ட தோர்நரியும்
கண்ட அதுவும் வஞ்சனையாய்.

ஆடே மிகவும் நல்லவர் நீர்
அருமை நேசன் உமைப்போல் யார்
தேடிட் டாலும்இக் கிணற்றழகும்
தேன்போல் நீரும் கிட்டாது



மிகவும் களித்து நீருண்டேன்
மேன்மை கண்டேன் ஆகையினால்
ஒக்கக் குடிப்பீர் வாரும் என
உடனே ஆடும் குதித்ததுவே.
கிட்டே நெருங்கி நரி ஆட்டுக்
கடாவின் முதுகில் ஏறியபின்

எட்டிக் குதித்துக் கரையதனில்
எளிதில் உதறி ஓடியதே.
ஆடோ நீந்திக் கரையேற
ஆகா மையினால் தத்தளித்துப்
பாடே பட்டும் முடியாமல்
பதறி உயிரை விடுத்ததுவே.
ஆகையி னாலே பிறர்வஞ்சம்
அறியா மலேநாம் நம்பிவிட்டால்
சாக நேரும் ஆதலினால்
சகலமும் ஆய்ந்தே நடந்திடுவோம். 29

## சிங்கமும் சுண்டெலியும்

காட்டில் வாழும் ஒருசிங்கம்
களைப்பாய்த் தனது குகையருகில்
ஒருநாள் தூங்கும் சமயத்தில்
உற்று ஒருசுண் டெலியதன்மேல்
ஓடி யாட விழித்தெழுந்து
ஓங்கி அறையப் போகையிலே
"ஐயா அடியேன் அறியாமல்
ஆடிய பிழையை மன்னிப்பீர்
என்னைக் கொல்லா தீர்" என்று
எலியுந் தாழ்ந்து வணங்கியதே
வணங்கக் கண்ட சிங்கம்அதன்
வண்ணங் கண்டு மனமிரங்கி

இணங்கிப் பெரிதுங் கண்ணியமாய்
எலியை மன்னித் தருளியதே
ஓடி எலியும் மறைந்ததன் பின்
ஒருநாள் சிங்கம் காட்டினிலே
வேடன் வைத்த ஒருவலையில்
வீழ்ந்தது பாவம் என்செய்யும்



கூடிய மட்டும் முயன்றதுதான்
கூடவில்லை வெளியில்வர
என்னைக் காப்பார் யாவருமே
இல்லையோ என்று கத்தியதே
ஓடிப்போன அந்தஎலி
உருகிய நன்றி யுணர்வோடு
தேடி யோடி வந்ததுகாண்
திகைத்துப் பதைத்துச் சமயத்தில்
வலையைக் கடித்து விடுவிக்க
வகையாய்ச் சிங்கம் தப்பியதே

சிறிய துரும்பும் பல்குத்தச்
சீராய் உதவும் எனக்கருதி
இனிதாய் நடப்பது நன்றாகும்
என்றும் அதுவே பொன்னாகும்.

## பேராசைப் பேயன்

செல்வம் நிறைந்த ஊரொன்றில்
சேர்ந்து வாழ்ந்தான் ஒருசெல்வன்
அளவில் லாத பணமிருந்தும்
ஆசை யாலே மிகவருந்தி
மேலும் மேலும் பொன்சேர்க்க
விருப்பங் கொண்டான் பலர்பார்க்க
தொட்டவை யெல்லாம் பொன்னானால்
துயரந் தீரும் என நினைந்தான்
இவன்பே ராசை நினைவறிந்து
இறைவனப் படியே வரங்கொடுத்தார்
ஓடிச் சென்று வீடடைந்து
உவப்பாய்ப் பொருள்கள் பலதொட்டான்
தொட்டன வெல்லாம் பொன்னாகத்
துள்ளிக் குதித்து மிகமகிழ்ந்தான்
சிறிது நேரம் ஆனவுடன்
சிறப்பாய் இலையில் உட்கார்ந்து
உண்ணுஞ் சோற்றை உடன்தொட்டான்
உடனே அதுவும் பொன்னாகத்

தாகந் தீர்க்க நீர்தொட்டான்
    தண்ணீ ரதுவும் பொன்னுகப்
பசியுந் தாகமும் உடல் வருந்தப்
    பாரில் விழுந்து புரண்டானே



கண்டாள் அவன்பெண் அழுதவளைக்
    கையால் தொட்டுக் கண் துடைத்தான்
அந்தோ அவளும் பொன்னுனள்
    'ஐயோ மோசம் போனேனே
எல்லை யில்லா ஆசையினுல்
    எல்லாந் துயராய் முடிந்தனவே
போதும் என்ற மனமொன்றே
    பொன்செய் மருந்து ஆமென்றே
பகரும் அறிவே நல்லறிவு
    பழைய நிலையே நன்னிலைமை'

என்று நன்ருய் உணர்ந்துருகி
இறைவா இறைவா எனஅலறி
'ஆசையின்றி வாழ்கின்றேன்
அமைந்த வாழ்வைத் தருவாய்நீ'
எனக்குழை வாக முறையிட்டான்
இறைவனும் உவந்து அருள்செய்தான்
உய்ந்தேன் உய்ந்தேன் எனமகிழ்ந்து
உயரும் பழைய நல்வாழ்விற்
பொருந்தி இனிது வாழ்ந்தனனே
புவியிற் புகழைச் சூழ்ந்தனனே. 31

## கூடா நட்பு

### எலியும் தவளையும்

குளத்தில் வாழ்ந்த தவளை ஒன்று
கூடும் கரையில் வாழ்ந்த
குணமிகுந்த எலியொன் ருேடு
கூடி மிகவும் நட்பாய்
வாழ்ந்த நாளில் அவையிரண்டும்
மகிழ்வாய் எண்ண மிட்டு
மறந்தும் ஒன்றை ஒன்று பிரியா
வகையை யேதெரிந் திட்டு
தங்கள் கால்கள் ஒன்ருே டொன்று
பிரியா விதமே கயிற்ருல்

தங்கி இறுகக் கட்டி அங்குத்
தனியாய்ப் பேசி உலவ
வழக்கம் போலத் தவளை நீரில்
வந்து தாவி நீந்த
வகையாய் நீந்தப் பழக்கமில்லா
எலியும் தவித்து நீரை



மூக்கைப் பிடிக்கக் குடித்து மூச்சு
விடவும் இயலா தாகி
மூக்கித் திணறி இறந்த தந்த
எலியும் உதவா தாகி
நீரில் மிதக்கத் தவளை ஒன்றும்
தோன்ரு தாகி நிற்க
நிலையாய் வானிற் பறந்து நின்ற
பருந்து எலியை நோக்கி,

பாய்ந்தே எலியைத் தூக்கக் கயிற்றின்
பிணைப்பால் ஐயோ பாவம் !
பதறித் தவிக்கத் தவளை யதுவும்
பருந்துக் குணவா கியதே
ஆத லாலே பிள்ளை களே !
அடையுங் கூடா நட்பால்
ஆகும் முடிவைக் கண்டு நீங்கள்
அறிவீர் உண்மை தெரிவீர். 32

# செந்தமிழ் வாழ்த்து

("ஓம் சக்தி ஓம்" என்ற மெட்டு)

வாழிய வாழியவே—செந்தமிழ்
வாழிய வாழியவே
வாழிய வாழியவே—செந்தமிழ்
வாழிய வாழியவே.
ஊழி பலகண்ட—செந்தமிழின்
உண்மையை யாரறிவார்
ஏழிசை யிற்சிறந்த—செந்தமிழ்
என்றென்றும் வாழியவே.
நீரில் எதிர்ந்ததமிழ்—எரியும்
நெருப்பில் நின்றதமிழ்
ஊரும் பெயருமில்லான்—பாடிய
ஒண்டமிழ் வாழியவே. 33

# கடவுள் வாழ்த்து

(" கல்லார்க்கும் கற்றவர்க்கும் " என்ற மெட்டு)

ஐயா நம் தோழர்களே !
அன்புடனே வருவீர் ;
ஆண்டவனை வணங்கிநாளும்
அல்லல்அறப் பெறுவீர் !



மெய்யாகக் காலைமாலை
வேளைகளில் நெஞ்சம்
வேண்டிவாழ்த்து வோம்நமக்கு
வேறிலையே தஞ்சம்
கொய்யாத தீங்கனியாம்
கோதுபடாக் கரும்பாம்
குன்றுது வாழ்மணியாம்
கூறிடும்பொன் அரும்பாம்

பொய்யாமல் எவ்விடத்தும்
பொலிந்திலங்குங் கடவுள்
பொன்னடியைப் போற்றிஇன்பம்
பூண்டுமகிழ் வோமே. 34

## கலைமகள் சிந்தனை

புத்தகத் துள்ளுறை மாதே
பூவில் அமர்ந்துறை வாழ்வே
வித்தகப் பெண்பிள்ளை நங்காய்
வேதப் பொருளுக் கிறைவீ



முத்தின் குடையுடை யாளே
மூவுல குந்தொழுந் தேவி
எத்தனை யும்உனைத் தொழுவோம்
எண்ணெழுத் தெங்கட் கருள்வாய்! 35

கழக வெளியீடு: உஅஅ

# கழக இளைஞர் பாட்டு

[5, 6-ஆம் வகுப்புக்கள்]



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

First Edition: 1941.
Second Edition: March 1955.

## முன்னுரை

சிறுவர்களின் கல்வி முன்னேற்றத்திற்குரிய வழிகள் பல; அவற்றுள் பாட்டுக்களின் வாயிலாகப் பலவும் கற்பித்தல் ஒரு சிறந்த வழியாகும்.

சிறுவர் விரும்புவனவும் பாட்டுக்களே. சிறுவர் உள்ளத்தில் என்றும் நீங்காது நிலைப்பனவும் பாட்டுக்களே. எனவே, 'குழந்தைப் பாட்டுக்கள்' என்ற தலைப்பில் துவக்கப் பள்ளி 1, 2-ஆம் வகுப்புக்களுக்குப் பயன்படுமாறு முன்னர் வெளியிட்டோம். பின்னர், 'சிறுவர் பாட்டு' என்ற தலைப்பில் சில பாட்டுக்களை 3, 4-ஆம் வகுப்புக்களுக்குப் பயனுமாறு தொகுத்து வெளியிட்டுள்ளோம்.

அதற்கு அடுத்த புத்தகமாகத் துவக்கப்பள்ளி 5, 6-ஆம் வகுப்புக்களுக்குப் பயன்படுமாறு 'இளைஞர் பாட்டு' என்ற தலைப்பில் தமிழறிஞர் சிலர் பாடிய பாட்டுக்களைத் தொகுத்து வெளியிடுகின்றோம். அவை இயற்கை, கணக்கு, நாடகம், வரலாறு, உரையாடல், கதை, கடவுள்வாழ்த்து முதலிய பல கருத்துக்களின் மேலும் இயற்றப்பெற்றிருக்கின்றன. தமிழ் ஆசிரியர்களும் பள்ளிக்கூடத் தலைவர்களும் இதனையும் வாங்கி மாணவர்கட்கு இன்பம் ஊட்டுவார்களாக!

இதன்கண் சேர்த்துக்கொள்ளுமாறு தாங்கள் பாடிய பாட்டுக்களை அன்புடன் அனுப்பியுதவிய தமிழ் அறிஞர்கட்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

Appar Achakam, Madras-1—II Ed. C. 1020.

# உள்ளுறை

பக்கம்

## வித்துவான் பெ. கோவிந்தனவர்கள்



## தமிழ்க்கவி சி. து. கன்னிசாமி அவர்கள்



## தமிழ்க்கவி ல. கு. கிருஷ்ணனவர்கள்



## இராவ்பகதூர் C. M. இராமச்சந்திரன் செட்டியாரவர்கள்



## தமிழ்ப் புலவர் அ. நடராச பிள்ளை அவர்கள்

# கழக இளைஞர் பாட்டு



## க. வெண்ணிலா

நீலக் கடலினிலே
நின்றெழு வெண்ணிலவே
கோலக் கடலினுள்ளே—நீ நாடிய
கொள்கைகள் என்ன உண்டோ?



வானக் கடலினிலே
வாங்கும் நல் வெண்ணிலவே
வானக் கடலினுள்ளே—நீ கொண்டதோர்
மீனின்பே ரென்னசொல்லாய்

முல்லை மலர்ந்ததுகாண்
மொய்ம்மலர் ஆம்பலென்னும்

நல்ல மலர்களுமே—நின்வரவினால்
நாடி மலர்ந்தனகாண்
கொண்ட களங்கமதைக்
குணமென நீக்கிலையே
பண்டை யெழில்மதி நீ—இல்லாவிடில்
பாரிருள் போகுமோசொல்
தேய்ந்து வளருமெழில்
சேருநல் வெண்ணிலவே
ஆய்ந்து நிலையாமை—தன்னை
அறிய உணர்த்தினையே.

## ௨. தென்றல்

சிலுசிலுத்த பூங்காற்று
தென்றல்எனுங் காற்று
மலயமலை இருந்துவரும்
மாண்புமிகு காற்று.
சந்தனத்தின் வாசமதைச்
சார்ந்துவருங் காற்று
மந்தமிகும் துன்பமதை
மாற்றுமொரு காற்று.
பாண்டியர்கள் செல்வமெனப்
பகர்ந்தஇளங் காற்று
ஈண்டுகோடைத் துன்பமதை
இன்பமாக்கும் காற்று.

கும்பமுனி வளர்த்துவிட்ட
கொம்பெனும்பூங் காற்று
எம்பெருமான் ஆசைகொள்ளும்
ஏற்றம்மிகும் காற்று.

## ௩. ஆறு

மலையில் பிறந்தாய் வண்டல் உறுவாய்
விலையில் பொருளை விரைந்தே கொணர்வாய்
அலையில் நுரையில் அணுகிப் பாய்வாய்
தொலையில் சமனில் தோன்றிச் செல்வாய்.

புன்செய் நிலத்தோர் புதுமை பெறவே
நன்செய் நிலமாய் நனிதான் செய்வாய்
இன்செய் பண்பும் இனிதே கொளலால்
பொன்செய் வண்மை பொருந்தி நிற்பாய்.

இயற்கை அழகோ இருபால் கொள்வாய்
செயற்கை அழகும் செறிந்தே நிற்பாய்
முயற்சி எடுத்து முதற்கண் மக்கள்
வயற்கண் ஆக்கும் வன்மை உனதே.

## ௪. நான் அறிந்த பூதங்கள்

நான்அறிந்த பூதம் ஐந்து
நவிலுகின்றேன் கேளுங்கள்
நான்அறிந்த பூதங்களே
நாளும்உண்மை ஆவன.

மண்எல்லாம் பூதம்ஒன்று
மாண்புடைய இப்பொருளே
திண்ணியதாய் நமைத்தாங்கும்
திருஎல்லாம் இதன்விளைவே.

நீர்எல்லாம் ஒருபூதம்
நிலமதனைச் சூழ்கடலாய்ச்
சீருடைய தண்மை எல்லாம்
சிறப்பாகத் தந்திடுமே.

தீஎல்லாம் ஒருபூதம்
திகழும்ஒளி உருவாகும்
பேயாகி அழித்தாலும்
பெருமைபெற உணவளிக்கும்.

காற்றெல்லாம் ஒருபூதம்
காணத்தான் இயலாதே
ஆற்றல்மிக உடைத்தாகும்
ஆருயிரின் வாழ்வாகும்.

வெளியாகும் ஒருபூதம்
மிகப்பரந்து ஒலிஇயக்கும்
வெளியாகும் இதன்பெருமை
மிகப்பெரிய நூல்களிலே.

பூதங்கள் இவைஐந்தும்
பூஉடலாம் உயிர்களுக்கே
பூதங்கள் இவைஐந்தும்
புகழ்கோயில் ஈசனுக்கே.

# ரு. விண்மீன்

நீல வானிலே நிலவு மீன்களே
கோலம் போலவே கூடி மிளிருவீர்

பாலைப் போலொளிர் பனிநி லாவுடன்
மாலைப் போதினில் மகிழ்ந்து உலவுவீர்

நாளும் நாளுமே நாலு திசையிலும்
நீளத் தோன்றிவிண் நிறைந்து மறைகுவீர்

வாவி நீரிலே வளரு மலரெனத்
தாவி வானிலே தவழ்ந்து ஒளிருவீர்



வரிசை வரிசையாய் வண்ணம் வண்ணமாய்
குரிசில் நிலவுடன் கூடி ஆடுவீர்

கண்ணைக் கவருவீர், கருத்தைக் கவருவீர்
விண்ணை விளக்குவீர், மண்ணை விளக்குவீர்

நின்று நோக்குவோர் நினைவை உயர்த்துவீர்
துன்றி நவமணிச் சோதி காட்டுவீர்

காட்டில் தோன்றுவீர், கடலில் தோன்றுவீர்
வீட்டில் மக்களும் விழையத் தோன்றுவீர்

கோவில் சுற்றுவீர், குளங்க ளாடுவீர்
நாவில் மந்திரம் நவில்வ தில்லையோ!

## ௩. சந்திரன்

சூரியனைச் சுற்றும் பூமி—அதைச்
சுற்றியே ஓடும் நிலாவெனுங் கோளம்
ஊரும்இத் திங்கள் தனக்கு—சொந்த
ஒளியொன்று மில்லையென் றேஉணர் வாயே




சூரிய கிரகணம்

சூரியன்பால் ஒளி வாங்கித்—தன்னால்
சுற்றப்படும் இந்தப் பூமியில் வீசும்
ஒருதரம் பூமியைச் சுற்றில்—நாட்கள்
இருபத்தே ழல்லது இருபத்தெட் டாமே

மதியினால் ஆமிந்த நாட்கள்—சேர்த்து
மாதமேன் றேயுல கெங்கும் அழைக்கும்

மாதத்திற் பாதிநா ளெல்லாம்—இந்த
மதியும் சூரியன்பக்க மாய்வரும் போது
நிலவின் ஒளிஅந்த நாட்கள்—தம்மில்
நின்றுநா டோறும் வளர்ச்சியாய்த் தோன்ற




சந்திர கிரகணம்

வளர்பிறை யென்றழைப் பார்கள்—மாதத்தில்
மற்றநாள் முறையே தேய்பிறை யாகும்
சூரிய னுக்கும்பூ மிக்கும்—இடையே
சூரிய கிரணமாம் மதிவரின் நேராய்
சந்திர சூரியர்க் கிடையில்—பூமி
சந்தித்தால் சந்திர கிரணமா மென்பார்
இந்தவகை எழில் திங்கள்—உலகம்
இன்புற ஒளிதந்து இலகுறும் அன்றே.

## எ. சூரியன்

சூரியன் என்னும் பெரிய உருண்டை
தூய நெருப்புப் பிழம்பதன் அண்டைத்
தோன்றும் பலசிறு கோளங்க ளெல்லாம்
சுற்றும்; இப் பூமி அவைகளில் ஒன்றும்

# அ. கடலின் பெயர்கள்

மழைக்கு முதற்கா ரணமாகி
வாழும் கடலின் வகையுரைப்போம்

விலையில் உயர்ந்த முத்துகளும்
வேண்டும் பவழத் திரள்களுமே

உலகந் தன்னில் உயிராக
உயரும் உப்பும் நெறியாகக்

கடலின் நீரில் பிறந்ததுவே
காணு மிடத்தில் சிறந்ததுவே

உவர்நீர் நிறைந்த பரப்பதனுல்
'உவரி' என்பார் சிறப்பதனுல்

அளவு காணுப் பெருமையினுல்
'அளக்கர்' ஆகும் உரிமையினுல்

உலகம் முழுதும் உண்டாக்கி
உண்டாம் உலகம் தனைக்காத்து

ஆகும் இறுதிக் காலத்தே
அழித்து மூன்று தொழில்செயவே

'முந்நீர்' என்ற பெயர்கொள்ளும்;
மொய்க்கும் செல்வம் உடைமையினுல்

'வாரி' ஆகும்; ஆழத்தால்
வகுத்தார் 'ஆழி' யெனும்பெயரை

கடப்பார் எவரும் இல்லாமை
கண்டே அழைத்தார் 'கடல்' என்றே

ஆறு பலவும் அடைந்தேவாழ்
அழகாம் வீடும் இதுவேயாம்.

## கூ. நிலப் பாகுபாடு

மலையும் மலையைச் சார்நாடும்
வலிய குறிஞ்சி நிலமாகும் ;

அமைந்த காடுங் கொல்லைகளும்
அழகாம் முல்லை நிலமென்ப ;

நீரும் நீரால் விளைவயல்சேர்
நிலமும் மருத நிலமாகும் ;

கடலுங் கடல்சேர் நிலமெல்லாம்
கால்செய் நெய்தல் நிலமென்ப ;

பகுத்த இவற்றி னுட்சேராப்
பாரே பாலை நிலமாமே.

## கூ0. இந்தியா

இந்தப்பெரிய நிலவுலகம்
ஐந்துபெரிய பிரிவாம்—அவை

அந்தமில்சீர் ஆசியாவும்
ஐரோப்பா ஆப் பிரிக்கா

ஆஸ்திரேலி யா அமெரிக்கா
ஆகுமென்பர் மேலோர்—இந்த
எத்தும்ஐந்து கண்டங்களினுள்
ஆசியா மிகப் பெரிது.

ஆசியாவின் தென்முகத்தில்
அமைந்த இந்தியதேசம்—இந்தத்
தேசத்தின்வட எல்லையாகச்
சிறந்த திமய மலையே.

கங்கைசிந்து பிரமபுத்திரா
கருதுநதிகள் மூன்றும்—கலந்
தெங்கும்வளமும் எழிலும்சேர
எல்லா நலமுந் தோன்றும்.

ஆரியாநல் வர்த்தமென்றே
அழைப்பா ரந்தப் பகுதி—சாத்
பூரம்விந்திய மலைகள்தெற்கிற்
பொருந்துசுவராம் தகுதி.

இம்மலைகளின் தென்றிசையில்
இருக்குந்தக்கிண நாடு—நில
வெம்மைதீர்கோ தாவரிகா
வேரிபற்பல ஓடும்.

நதிகள்பலவுஞ் செம்மைசெய்ய
நலங்கள்பலவும் மேவி—நாம்
வதியும் இந்தத் தென்னிந்தியா
வயங்கும்உலகில் தாவி.

## கக. மலை

கண்ணுக் கெட்டா துயர்ந்த மலையே
கருநி றத்தினைக் கொண்ட மலையே
விண்ணை யொட்டி விளங்கு மலையே
விஞ்சை நாடு விளங்கு மலையே.

சான்றோர் செய்யுளைப் போற்பல பொருள்கள்
சாரச் சாரப் பெருகு மலையே
கானும் யாறுங் கலந்து விளங்கும்
காட்சிக் கின்பங் கொடுக்கு மலையே.

எல்லா முங்கடந் தேநிறை பொற்பின்
இறைவன் போலென் றும்அழி வில்லாய்
எல்லா முந்துறந் தார்மனம் போல
என்று மேசலி யாத மலையே.

நோய்கள் போக்கும் மருந்துகள் நின்பால்
நோற்போர் தமக்கும் புகலிடம் நின்பால்
பாயும் ஆறுக ளால்பயன் ஈவாய்
பகரு மாமலை வாழிநீ வாழி.

## கஉ. பசுங் கொடி

("பாப்பா பாட்டு"—மெட்டு)

ஓடிவிளை யாடுகின்ற சின்னபாப்பா!—நான்
உன்றனுக்குக் காட்டுவதை உற்றுப்பார்ப்பாய்

தேடினும் அகப்படுமோ சிலபொழுதில்—கையால்
செய்துபார்க்க வும்முடி யாதேவெளிதில் (ஓடி)

பச்சைநிற மாகப்பல இலைசூடி—நீண்ட
பாம்புஇவை யென்னச்சில கொடியோடி



இச்சையுடன் கொம்புகிளை தமைத்தேடி—தன்
எண்ணம்போல் வளைந்தவைமேல் சுற்றி ஆடி (ஓடி)

முத்துப்பல ரத்தினம்போல்
மொக்குகள்கொண்டு—வண்டு
மொய்த்துஉண் ணும் தேன் நிறைந்த
பூக்கள்மலர்ந்து

சுற்றுமுள்ள பேர்களிக்க
மலர்காட்டி—நல்லோர்
துட்டரிவர் என்றெண்ணுமல்
மணம்வீசி (ஓடி)



## கரு. வாழை மரம்

வாழை மரத்தைப் பயிர்செய்யும்
வகையைச் சொல்வேன் கேட்டுய்யும்

நிலத்தை அகழ்ந்து மண்ணெடுத்து
நிரம்ப நிரம்ப எருமடுத்து

வாழைக் கன்றை அதில்நட்டு
வகையாய்த் தண்ணீர் தினம்விட்டு

இரண்டு வாரம் செலுமட்டும்
இடிக்க வேண்டும் செடிசுற்றும்

தண்ணீர் மட்டும் தினந்தோறும்
தவறு தூற்ற வேறென்றும்

பின்னர்க் கொத்திக் களைபறித்துப்
பிசகில் லாமல் எருவிட்டால்

மரத்தின் கீழே சில கன்று
வகையாய் முளைக்கும் எழில் நன்று

வயது முதிர்ச்சி பெற்றதன்பின்
வாழை ஓரிலை உற்றீனும்

கண்ணாடி யிலையென் றேஅதனைக்
கருதி அழைப்பார் பின்பதனை

அடுத்து ஒற்றைப் பூவெடுக்கும்
அதன்பின் வாழைக் குலையடுக்கும்

• காயும் ஆகும் சமைத்துண்ணக்
கனியும் ஆகும் சுவைத்துண்ணப்

பூவும் தண்டும் கறிவகையாம்
பூமியில் இதுபோல் மரமிலையாம்

இலையே உண்ணுங் கலனாகும்
இதன்மேற் பட்டையுங் கலனாகும்

பூவைத் தொடுக்க நாருதவும்
பொய்யா தென்றும் பாருதவும்.

## கச. பச்சைக் கிளி

பச்சைப் பசுங்கிளியே வாவா
பாலுந்தே னுந்தருவேன் வாவா

மெச்சும் பசுங்கிளியே வாவா
மெல்லமெல் லப்பறந்து வாவா

கண்ணைக் கவரும்உன்றன் பச்சை
காதுக் கினிக்கும்உன்றன் கொச்சை

விண்ணில் பறக்கும்உன்றன் விச்சை
வியப்பினைச் செய்கிறது வாவா

பார்க்கப் பகட்டும்உன்றன் மூக்கு
பண்ணோடு பாடும்உன்றன் நாக்கு

வேர்த்துவேர்த் தலைவதை நீக்கு
வீட்டில் விளையாடுவோம் வாவா

காட்டில்ஏன் பறக்கின்றாய் கிள்ளாய்
கனிகள் பலதருவேன் கொள்ளாய்

வீட்டில்என் ளுேடுநுழை உள்ளாய்
விரும்பி விளையாடுவோம் வாவா

பைந்தமிழ்ப் பாட்டளிப்பேன் முன்னால்
பாடுமுன் பாட்டையளி பின்னால்

எந்த விதத்தினிலும் என்னால்
இன்னல் வராதுனக்கு வாவா

## கரு. கிளி

ஆற்றங் கரையினிலே—எழில்
ஆல மரக்கிளையில்

வீற்றிருக் குங்கிளியே—உன்றன்
மேன்மையை என்னசொல்வேன்



பச்சை நிறக்கிளிஉன்—அலகு
பவழத்தா லாகியதோ

நச்சி உனைவளர்ப்பார்—உன்றன்
நன்மையைக் கண்டனரோ

சின்னஞ் சிறுகுழந்தை—குழல்
சேர்ந்தஇன் னோசையினால்

என்ன பொருளுமின்றி—உரை
இன்ப மழலையைப்போல்

சொன்னதை யேதிருப்பிச்—சொல்லுந்
தோலா வழக்குடையாய்

நின்னெழில் என்னசொல்வேன்—கிளியே
நீள நினைவதல்லால்.

## கசூ. வெள்ளைப் புறாக்கள்

நெல்லறுத்த வயல்களிலே
நேர்ந்தமாலை வெய்யிலிலே

கள்ளமற்று விதைபொறுக்கும்
வெள்ளைப் புறாக்கள்—உங்கள்

காட்சிகாணக் கிட்டிவந்தேன்
குள்ளத் தாராக்காள்!

மரகதம்போல் கண்ணழகும்—
மணிபிளக்கும் வாயழகும்

திறனமைந்த பவழக்காலும்
வெள்ளைப் புறாக்கள்—உமக்குச்

செய்தனுப்பும் வலவன் எவன் ?
குள்ளத் தாராக்காள் !

பார்த்தகண்கள் யானிமையேன்...
பசித்திட்டாலும் வீடடையேன்



நேர்த்திகண்டு நான்மகிழ்வேன்
வெள்ளைப் புறுக்காள்—என்

நெஞ்சைப் பறிகொடுத்தேன்
குள்ளத் தாராக்காள் !

என்றும் குளித்திடுவீர்—
இணைபிரியீர் ! நாங்களதைக்

கண்டு நடந்திடவே
வெள்ளைப் புறுக்காள்—வழி
காட்டவந்த தெய்வம்நீரோ
குள்ளத் தாராக்காள் !

## கஎ. காக்கை

சின்னஞ் சிறிய பாலர்களே
சிந்தனை செய்வீர் சீலர்களே
எந்த உயிரும் எப்பொருளும்
எடுத்துக் காட்டும் நற்பொருளும்



கரிய காக்கையைக் காணுங்கள்
கண்டதன் வழியைப் பேணுங்கள்
விடியற் காலை எழுந்திருக்கும்
விரைவாய்ப் பறந்து தொழில்பார்க்கும்

உறவைச் சேர்ந்தே உணவருந்தும்
ஒன்றாய்க் குலவி மனந்திருந்தும்

இனத்தில் ஒன்று தீங்குற்றால்
எல்லாம் கரையும் பாங்குற்றே.

அழகிய பொருள்களைத் தாமருந்தி
அகிலந் தூய்மை ஆக்குமிது

உலகம் நோயால் நசியாமல்
உய்வது காக்கை செயலாமல்

தினமும் மாலை நீர் நிலையைத்
தேடி முழுதும் சீர் நிலவ

இன்னும் இவைபோல் எவ்வளவோ
இருக்கும் குணங்கள் சொல்லளவோ.

## கஅ. நாய்

(இங்கிலீஷ் நோட்)

வாலையாட்டிப் பல்லைக் கெஞ்சும்
வண்ண நாயே கிட்டி வா!

வார்த்தைசில சொல்ல வந்தேன்
வந்து கேட்டு எட்டப் போ!

உன்னைப்போல உதவி செய்வார்
ஒருவ ரில்லை யாயினும்

உன்னிடத்தில் பாயும் பேதைக்
குணமமைந்த தென்கொலோ !
ஆட்டுமந்தை வீட்டுக் காவல்
அனைத்தும் உன்ன தாயினும்



அயலார் நல்லர் தீய ரென்று
அறியா தென்ன குறைலே.
கலக்க மின்றி வழியில் செல்லக்
கல்லா மல் நீ வளைகிறாய்
கட்டிப்போட்டுக் கஞ்சி வார்ப்போர்
கண்டால் வாலைக் குழைக்கிறாய்
தீயர் நல்லர் என்று நன்றாய்த்
தெரிந்து கடிக்கப் போறிடு.
செய்வதென்றாய் ஆய்ந்துணர்ந்து
சீராய் நல்ல பேறெடு.

# ௧௯. பறவையும் உலகமும்

கேளுங்கள் பாலர்களே!—நானும்
கிடந்த பொழுதுஒரு முட்டையினுள்ளே

வட்ட வடிவமான—சிற்றுருண்டை
வழுவழுப்பான வெள்ளை ஓடொன்றே

உலகத்தை மதித்திருந்தேன்—பிறகுநான்
உன்னத முள்ளசிறு கூட்டிலிருந்தேன்



அப்போது இந்தஉலகம்—புல்லாலே
ஆகிஒரு தாயுடனே அமைந்ததென்றே

உள்ளத்தில் மகிழ்ச்சிகொண்டேன்—மெல்லநான்
ஒருகிளை மறுகிளை தாவிப்பறக்க

இறக்கையும் முளைத்தவுடன்—ஓ ஓ!
இலைகிளை நிறைந்ததே உலகமென்றேன்

ஆகாயம் அளவும்இப்போ—உயரத்தில்
ஆனந்த மாய்ப்பறக்க அறிந்தவுடன்

உலகமோ மிகப்பெரிதாய்—உண்மைஒன்றும்
உணரவே முடியாமல் விரிந்ததென்னே!

## உ0. பயிர் வேலை

வேலை எதற்கும் சிறந்ததென
வேண்டப் படுவது பயிர்வேலை

ஏரால் உழுது நிலம்திருத்தி
என்றும் நல்ல உழைப்பெடுத்துப்



பயிர்செய் துண்ணும் பண்புடையார்
பாரில் யார்க்கும் நண்புடையார்

உழுவார் என்றும் இரவார்கள்
உற்றோர்க் கீவதிற் கரவார்கள்



கலீலியோ



ஐசக் நியூடன்



ஜேம்சு வாட்



எடிசன்



காக்ஸ்டன்

எல்லாந் துறந்தார் வாழ்வதுவும்
ஏரின் செல்வத் தாலென்பார்

வாழ்வார் என்பார் உழுதுண்பார்
மற்றவர் எல்லாம் தொழுதுண்பார்

ஆத லாலே பிள்ளைகளே
அரிய பயிர்த்தொழில் இதுவொன்றே

நாட்டில் உயர்ந்த தொழிலாகும்
நாடி உழைத்தல் நலமாகும்.

## உ௬. அறிஞர்களும் பொறிகளும்

அச்சுப் பொறியினால் ஆகும்நன் மையெல்லாம்
ஆராய்ந்து காக்ஸ்டன் எனும்பெரியார்
மெச்சும் வகையினால் அச்சிடும் நற்றொழில்
மேதினி தன்னிலே கொண்டுவந்தார்.

சூரியன் நிற்பதும் பூமி சுழல்வதும்
துன்னும் இராப்பகல் ஆவதுவும்
சீருடன் ஆய்ந்த கலீலியோ கண்டனர்
சேண்பொருள் காணுங் கருவிதன்னை.

நீராவி தன்னால் இயந்திரம் போக்கும்நல்
நீர்மையை ஜேம்சுவாட் கண்டனரே
பாரின் வசீகர சத்தியின் மேன்மையைப்
பார்த்தறிந் தார்ஐசக்நியூட்ட னென்பார்.

பேசும் ஒலியைப் பரப்புங் கருவியும்
பேணுநல் இன்னிசைப் பெட்டியெனும்
ஏசலில் லாத பொறிபிற வுங்கண்டார்
எடிசன் என்னும் பெயரேற்றவரே.

## ௨௨. வானவூர்தி




வானவூர்தி

ஓடி விளையாடும் பாப்பா—நீ
உயர நிமிர்ந்தெனைப்பார் பாப்பா
கூடி விளையாடும் பாப்பா—நான்
கொஞ்சும் பறவையன்று பாப்பா
பாடி மகிழ்ந்திடுவாய் பாப்பா—நான்
பறந்து சுழன்றிடுவேன் பாப்பா
நாடித் தபாலெடுப்பேன் பாப்பா—முன்னே
நல்லபேர் எடுத்தேனடி பாப்பா.

பாப்பா நீ கடலினில் பார்ப்பாய்—மெல்லப்
பலப்பல கப்பல்களைப் பார்ப்பாய் ;
பாப்பா நீ நிலத்திலே பார்ப்பாய்—இருப்புப்
பாதையின்மேல் ரயில்களைப் பார்ப்பாய்
பாப்பா நான் அவற்றினும் விசையாய்-வானில்
பறந்து விரைந்திடுவேன் பார்ப்பாய்
பாப்பா நீ ஆராய்ந்து பார்ப்பாய்—எனக்குப்
படிதனில் ஒப்பார்யார் பாப்பா.
பாழும் மனிதரெனைப் பாப்பா—கொடும்
போருக் கழைத்தாரடி பாப்பா
ஆழும் படிநகரைப் பாப்பா—நான்
அழித்தெரித்த பாவியடி பாப்பா
சூழும்என் பேருரைத்தால் பாப்பா—மக்கள்
சூழ்ந்து நடுங்குகின்றார் பாப்பா
ஆழ எனைக்காணும் பாப்பா—நான்
ஆரென்றுரைத்திடடி பாப்பா.

## ௨௫. அன்னையின் அன்பு

(" நாதர்முடி மீதிருக்கும் " என்ற மெட்டு)

என்னை அன்பாய்ப் பெற்றெடுத்த அன்னையாரே !
இன்னமுதப் பால்கொடுத்த அன்னையாரே !
பொன்னின்நல்ல தொட்டிலிட்டு என்னை ஆட்டினாய்,
பொங்குதமிழ்ப் பாட்டுப்பாடி இன்பமூட்டினாய் !

நான்வருந்த நீமருந் தருந்தல்என்னவோ,
நல்லவன் நான் வாழவேண்டும் என்றஎண்ணமோ!

வான்உலாவும் வட்டமதி தன்னைக்காட்டினாய்,
வண்ணவண்ண ஆடைமணி ஆரம்பூட்டினாய் !



கையிலென்னை ஏந்திமுகங் கண்டுமகிழ்ந்தாய்,
கண்மணியே, செல்வமே! என் றென்றுபுகழ்ந்தாய்!

மெய்யிலெனைக் கொண்டணைத்து முத்தங்கொடுத்தாய்
மேன்மையான பாலும்சோறு நித்தங்கொடுத்தாய்.

என்சிறிய மழலைகேட்டு இன்பம்ஊறினாய் !
இளநடையே கண்டுனது துன்பம் ஆறினாய் !

உன்கருணை இன்றிநானும் உய்வதும்உண்டோ,
உலகில்உன்னை அன்றிவேறு தெய்வமும்உண்டோ!

## உச. செயத்தகுவன

("புத்திகெட்ட பூனை இரண்டு" என்ற மெட்டு)

கள்ள முள்ளது காக்கை
　　காக்கத் தக்கது யாக்கை
பள்ளத் தில்நீ ரோடும்
　　படிப்பால் அறிவு கூடும்
கள்ளியி லேபா லுண்டு
　　கற்றோர்க் குச்செய் தொண்டு
குள்ளர் மெள்ளவே செல்வார்
　　குழந்தைகள் மெய்யே சொல்வார்.

## உரு. கல்வியின் சிறப்பு

எந்நாளும் அழியாத
　　இருஞ்செல்வம் கல்வியென்பார்
நன்றாகும் நாற்பொருளும்
　　நாடிவரும் இதனாலே.

எண்ணினுடன் எழுத்துணரா
　　ஏழையர்தம் கண்களினைப்
புண்ணென்றே உலகுரைக்கும்
　　பொய்யன்று இவ்வுரையே.

தோண்டுவதால் மணலூறும்
　　தூநீரின் தகைபோல
வேண்டியுணர் கல்வியினால்
　　விளையும்நல்ல அறிவென்பார்.

உடையழகும் நடையழகும்
 உருவழகும் அழகல்ல
நடுநிலைமை தருங்கல்வி
 நல்லழகே அழகாமே,

வாழ்நாளோ சிறிதளவாம்
 வருத்துபிணி பெரிதுளவாம்
ஊழ்போக்கும் உயர்கல்வி
 உணராத செயலென்னே.

கண்போன்ற பலநூல்கள்
 கருத்தாகப் பயிலாதார்
மண்பாவை போலிந்த
 மாநிலத்தில் கிடப்பாரே !

## உகூ. நன்னெறி

### ஒழுங்குடைமை

ஆடும் பொழுதும் ஓரிடத்தே
 அமரும் பொழுதும் விளையாடி
ஓடும் பொழுதும் வரும்பொழுதும்
 ஒழுங்கு சிறிதும் தவறுமே.

### தூய்மை

கந்தைத் துணியே யானாலும்
 கசக்கித் துவைத்துக் கட்டிடுவோம்
எந்தஉணவே யானாலும்
 இட்டதை உண்டு இருப்போமே.

நோயே யில்லா வாழ்வதுவே
நோக்கின் செல்வ வாழ்வாகும்
ஆய வதனுல் முகங்கைகால்
அனைத்தும் தூய்மை செய்வோமே.

பெற்றோர்ப் பேணல்

அப்பா என்ன செப்பிடினும்
அம்மா என்ன மொழிந்திடினும்
செப்போம் ஒன்றும் மாருக
செய்யோம் ஒன்றும் வேருக.

இரக்கம் உடைமை

அன்பே இன்பம் தரும்பொருளாம்
அன்பே கடவுள் தன்னுருவாம்
அன்பே எல்லாம் ஆதலினுல்
அதனை மறவோம் மறவோமே.

பொய்யாமை

அருளே வருவ தாயிடினும்
பொருளே வருவ தாயிடினும்
புகழே வருவ தாயிடினும்
இகழே வருவ தாயிடினும்

இன்பம் வருவ தாயிடினும்
துன்பம் தொலைவ தாயிடினும்
மெய்யே அன்றி எப்பொழுதும்
பொய்யே புகலோம் புகலோமே.

## உஎ. அச்சமில்லை அச்சமில்லை

அச்சமில்லை அச்சமில்லை
அச்சமென்ப தில்லையே

அறிவுடையா னொருவனுக்கு
அச்சமென்ப தில்லையே (அச்ச)

ஆண்டவனை நம்புவார்க்கு
அச்சமென்ப தில்லையே (அச்ச)

இச்சைதனை அற்றவர்க்கு
அச்சமென்ப தில்லையே (அச்ச)



ஈதல்இசை என்பவர்க்கு
அச்சமென்ப தில்லையே (அச்ச)

உண்மைபேசும் ஒருவனுக்கு
அச்சமென்ப தில்லையே (அச்ச)

ஊக்கமுள்ள ஒருவனுக்கு
அச்சமென்ப தில்லையே (அச்ச)

எண்ணிஎண்ணித் துணிபவர்க்கு
அச்சமென்ப தில்லையே (அச்ச)
ஏரேசெல்வம் என்பவர்க்கு
அச்சமென்ப தில்லையே (அச்ச)
ஐயமறக் கற்றவர்க்கு
அச்சமென்ப தில்லையே (அச்ச)
ஒழுக்கம்உயிர் என்பவர்க்கு
அச்சமென்ப தில்லையே (அச்ச)
ஓதுநா உடையவர்க்கு
அச்சமென்ப தில்லையே (அச்ச)
ஔவைவழி நடப்பவர்க்கு
அச்சமென்ப தில்லையே (அச்ச)
அஃகமென்றுந் தேடுவார்க்கு
அச்சமென்ப தில்லையே (அச்ச)

## உஅ. கற்கை நன்றே

[குறவஞ்சிமெட்டு. புன்னாகவராளி, பியாகு, கல்யாணி
முதலிய இசையிற் பாடுக]

("எங்கள் முத்துமாரி" என்ற மெட்டு)

எல்லோரும் கல்விகற்போம்
இனியதமிழ் நாட்டீர்!
கல்வியில்லார் உலகினிலே
கடையரெனத் தாழ்வார். (எல்)

எண்ணெழுத்தும் கண்களன்றோ
இதையறியார் உண்டோ.
பெண்களுமே ஆண்களைப்போல்
பெறவேண்டும் அறிவை. (எல்)

இருளடைந்த வீட்டினிலே
இன்பம்என்றும் உண்டோ
தெருளில்லார் வாழ்க்கையிலே
திருவுடைமை உண்டோ. (எல்)

ஆளழகும் அணியழகும்
அறிவழகுக் கிணையோ
தோலழகால் யாதுபயன்
சுவையழகே கனியாம் (எல்)

நாலெழுத்துக் கற்றுக்கொண்டால்
நல்லதுண்டு வாழ்வில்
காலமெல்லாம் பொன்னாக்கிக்
கல்வியினை வளர்ப்போம். (எல்)

உலகமெங்கும் கல்வியினை
உயிரெனக்காக் கின்றார்
பலகலைகள் பயிலுகின்றார்
பண்புடன்வாழ் கின்றார். (எல்)

பதினைந்தில் ஒருவர்கூடப்
படிக்கவில்லை இங்கே
இதுநமக்கு வெட்கமன்றோ
முதியதமிழ் நாட்டீர்! (எல்)

நல்லநல்ல நூல்களிங்கே
 நயமுடனுண் டறிவீர்
சொல்லறியா ஊமரெனத்
 தோன்றலுமக் கழகோ. (எல்)

வள்ளுவரும் ஔவையாரும்
 வந்ததமிழ் நாட்டீர்
தெள்ளியதேன் பொற்கவிதை
 செழித்ததமிழ் நாட்டீர்! (எல்)

கல்விகற்க விரைந்திடுவீர்
 கன்னித்தமிழ் நாட்டீர்
கல்வியொன்றே நாமெல்லாம்
 கடைத்தேறும் வழியாம். (எல்)

சாதிமதச் சண்டையில்லை
 சரிநிகராய் யாரும்
பேதமறக் கல்விகற்போம்
 பிரிவினையை ஒழிப்போம். (எல்)

வீடுதொறும் கல்வியெனும்
 விளக்கேற்றி வைப்போம்
வாடுகின்ற மன்னுயிரின்
 வறுமையினைத் தீர்ப்போம். (எல்)

எண்ணறிவீர் எழுத்தறிவீர்
 இயற்கலைகள் அறிவீர்
பண்ணறிவீர் பயனறிவீர்
 பதிநூல்கள் அறிவீர்! (எல்)

பொல்லதெல்லாம் போயொழியும்
புண்ணியங்கள் பொலியும்
நல்லதெல்லாந் தேடிவரும்
நந்தமிழைக் கற்றால். (எல்)

பொன்னளிக்கும் பொருளளிக்கும்
புகழெல்லாம் அளிக்கும்
சன்மார்க்க வாழ்வளிக்கும்
சத்தியமாங் கல்வி. (எல்)

கற்கைநன்றே கற்கைநன்றே
கைப்பிச்சை யேற்றும்
கற்றவர்க்கே வெற்றியுண்டு
கல்விகற்க வாரீர்! (எல்)

## உகூ. இலக்கணம்

இலக்கணம் இலக்கணம் என்போமே
இனிய கலைஅது என்போமே
செந்தமிழ் இலக்கணம் அதனிலுமே
திருந்திய இலக்கணம் எதனிலுமே
ஏனெனின், இயற்கையின் படமதுவே
எல்லாம் அடங்கிடும் இடமதுவே
இயற்கையில் உடம்புண்டு உயிருண்டு
எழுத்திலும் உயிர்மெய் இனமுண்டு
உலகத்தில் குறியர் நெடியருண்டு
உயிரெழுத் திலும்குறில் நெடிலுண்டு

உலகத்தில் மெலியர் வலியருண்டு
உண்மையில் இடைத்தர உடம்புமுண்டு

மெய்யெழுத் தெல்லாம் இங்ஙனமே
மெல்லின வல்லின இடையினமாம்

என்னே! இலக்கணத் தமிழ்மொழியே
இதைப்போ லுண்டோ பிறமொழியே!

## ௩0. செந்தமிழ் நாடு

செந்தமிழ் நாடெங்கள் நாடே—உயர்
தேவரும் போற்றுபொன் ஞடே.

வந்தனை புரிவமெப் போதும்—இது
வானிலும் மாண்புயர் நாடே.

ஆண்டவன் ஆண்டபொன் ஞடு—எங்கள்
அருளுடைப் பாண்டியன் நாடு

நீண்டசீர்ச் சோழநன் ஞடு—என்றும்
நிலவிசைச் சேரநன் ஞடு.

கொடையிற் சிறந்தநற் பாரி—உயர்
குமணன் முதற்பலர் நாடு

நடையிற் சிறந்தநல் லோர்கள்—உயர்
ஞானியர் வீரர்கள் நாடு.

கற்புடைக் கண்ணகி நாடு—எம்
கண்மணி ஆண்டாளின் நாடு

பொற்புடைக் கன்னியர் நாடு—எம்
புண்ணியத் தாய்த்தமிழ் நாடு.

காவிரி சீர்மிகு நாடு—உயர்
கடவுளர் வைகைநன் னாடு

பூவிரி பொருநைநன் னாடு—எங்கள்
புண்ணியத் தாய்த்தமிழ் நாடு.

முத்தமிழ் நாடுயர் நாடு—எங்கள்
முருகன் திருப்புகழ் நாடு

சித்தரும் முனிவரும் என்றும்—இங்குச்
சேர்ந்துறை தெய்விக நாடு.

## ௩௧. தமிழ் நாடு

("பச்சைமலை பவளமலை" என்ற மெட்டு)

எங்கள்தமிழ் நாட்டின்வளம் எடுத்துரைப்போம் கேளீர்
இயற்கைவளம் செயற்கைவளம் எங்குமுள்ள நாடு

தெங்குபலா மாகமுகு நன்குவளர் நாடு
தீம்பலவின் தேனொழுகச் செந்நெல்வளர் நாடு

மங்குல்தவழ் மாளிகைகள் மன்னியசீர் நாடு
மங்கையர்கள் பாடிநட மாடுகின்ற நாடு

சங்கமிருந் தறிவுடையோர் தமிழ்வளர்த்த நாடு
தமிழ்மொழியைத் தாய்மொழியாய்ப் பேசுவதெம் நாடே.

## ௩௨. தமிழ்மொழி வாழ்த்து

("மாற்றறியாத" என்னும் மெட்டு)

தேனினும் இனியநற் செந்தமிழ் மொழியே
தென்னாடு விளங்குறத் திகழுந்தென் மொழியே

ஊனினும் ஒளிர்வுறும் ஒண்டமிழ் மொழியே
உணர்வினுக் குணர்வதாய் ஒளிர்தமிழ்மொழியே

வானினும் ஓங்கிய வண்டமிழ் மொழியே
மாந்தருக் கிருகண்ணா வயங்குநன் மொழியே

தானியல் சிறப்புறுந் தனித்தமிழ் மொழியே
தழைத்தினி தோங்குவாய் தண்டமிழ் மொழியே.

## ௩௩. தமிழ்த்தாய்த் திருப்பள்ளு

("ஆடுவோமே பள்ளு பாடுவோமே" என்ற மெட்டு)

(பல்லவி)

போற்றுவோமே பணி யாற்றுவோமே
பூதலமதனிலே தமிழ்த்தாய் பொலிந்திடப் (போற்று)

(சரணங்கள்)

காப்பியங்கள் பலவற்றைக்
கண்டுபிடிப்போம்—நல்ல
கருத்தினை மக்களிடை
விளக்கியுரைப்போம்—தொன்மைக்

காப்பியம் பன்முறையே
நன்குபடிப்போம்—அங்குக்
காணும் பொருளியல்கள்
நன்குவிரிப்போம் (போற்று)

வள்ளுவரை முடிமீதே
வைத்துப்போற்றுவோம்—அவர்
வழுத்திய உரைகளை
அழுத்தமாய்க்கொள்வோம்—நெஞ்சைக்
கொள்ளை கொள்ளும் வாசகத்தை
அள்ளிக்கொள்ளுவோம்—அன்பு
கொழுந்துவிடுங் கோவையாரில்
அழுந்திமூழ்குவோம் (போற்று)

எட்டுத்தொகை நூல்களையே
எடுத்துப்படிப்போம்—முன்னோர்
ஏற்றமதை நாற்றிசையும்
எடுத்துவீசுவோம்—சங்கம்
பத்துப்பாட்டு நூல்களை நாம்
படித்துமகிழ்வோம்—அவண்
பகர்கின்ற நாகரிகம்
பரப்பிஉய்குவோம் (போற்று)

கண்ணகி நூல் படித்து நாம்
கருத்தினில்வைப்போம்—புத்தர்
கருத்து நிறை மணிமேகலை
பொருத்தமாய்க்கொள்வோம்—விருத்த

ஒண்பாவில் உயர்கம்பன்
　　உரைத்துமேவைத்த—ஒழுக்
குயர்ராம காதையினை
　　உள்ளத்தேகொள்வோம் (போற்று)

ஆங்கிலத்திற் காணுகின்ற
　　அருமை நூல்களை—உயர்
அரிய மொழிபெயர்ப்பால்
　　உரியவாய்க்கொள்வோம்—சிலர்
பாங்குள்ள தமிழ்த்தொடரில்
　　பிறமொழிசேர்த்து—நம்மைப்
பாழ்படுத்தும் வழிகளை
　　ஆழ்த்தியொழிப்போம் (போற்று)

நூல்நிலையம் நாடெங்கும்
　　நிறுவியே வைப்போம்—தமிழ்
நூல்களை நிரப்பியே
　　அறிவைவளர்ப்போம்—புதுத்
தாள்கள் பலவற்றைச்
　　சேர்த்துவைத்துமே—தொலை
தங்குமக்கள் செய்திகளை
　　இங்கறிவிப்போம். (போற்று)

## ௫௪. தமிழர் நாகரிகம்

செந்தமிழ் நாட்டினிலே—வாழ்ந்த
　　சீருடை மாந்தர்தம் நாகரிகக் கொள்கை

எந்தவகை யுரைப்போம்—அவர்
ஏர்பெற்ற வாழ்க்கையிற் சீர்பெற்ற நாட்களில்
அறிவை விளக்கஞ் செய்யும்—அழ
கார்ந்த ஒண் ணூல்களை ஆராய்ந்தவை காட்டும்
நெறியினிற் சென்றனரே—என்றும்
நிற்கும் புகழுடன் கப்பல் களிற்சென்று
வாணிகம் செய்தனரே—பண்ட
மாற்றி வெளிநாட்டில் மல்கு பலபண்டம்
காண நம் நாடுதந்தார்—கவின்
கம்மத் தொழில்வல்ல காட்சிய ராகையால்
பல்வே றணிகலன்கள்—செய்தார்
பட்டும் பருத்தியும் நுண்மயி ருங்கொண்டு
நல்ல கலைகள் செய்தார்—எழில்
நாட்டும்சிற்பக்கலை நாடெல்லாங் கொண்டாடக்
கோயில்க ளும்வகுத்தார்—மாட
கூடங் களுங்கொண்ட மாநக ராக்கினர்
தூய புலமையெழ—நூல்கள்
தோற்றும் பலதமிழ்ச் சங்கங்கள் கூட்டினர்
கொல்லுந் தொழிலினுடன்—புலால்
கொள்வதுங் கள்ளையுட்கொள்வதும் நீக்கினர்
நல்ல பசுவினங்கள்—ஓம்பி
நாட்டில் அருட்செல்வம் நாடும் படிசெய்தார்
நாட்டினை யாண்ட மன்னர்—செங்கோல்
நாளும் வளரக் குடிகளைக் காத்தனர்

ஆட்களும் யானைகளும்—எழில்
ஆகும் புரவிகளும் தேர்த்திர ளுங்கொண்ட
சேனை களும்அமைத்தார்—பகை
சேரும் அரசரை ஓட்டியும் வென்றனர்
ஆன பயிர்த்தொழிலை—மேன்மேல்
ஆக வளம்படக் காத்தனர் நாட்டிலே
நாடக மேன்மைகண்டார்—இசை
நல்குங் கருவிகள் நாடியே செய்தனர்
பாடுந் தொழில்பயின்ற—தமிழ்ப்
பாவையர் ஆடல் துறையிலுந் தேர்ந்தனர்
இத்தகை மேன்மையினில்—நின்று
ஏர்பெற்ற இந்தத் தமிழகம் இக்காலம்
எத்தகைத் தாயுளது—இவண்
இயம்பும் பழைமை மறந்தென் செய்யவோ!

## ௫௫. பொங்கல் விழா

பொங்கற் புதுநாள் புகுந்தது—மனம்
பூரித்த தின்பம் எழுந்தது
எங்கும் மணவொலி போலவே—மக்கள்
ஏத்திசைப் பார்கள் சாலவே
செவ்விய வெண்சுதை தீற்றுவார்—இல்லம்
செம்மண் ஒளிபெறப் போற்றுவார்
தெய்வத் திறம்பட எங்குமே—எழில்
சேருங் கோலங்கள் பொங்குமே

வாசலில் கீழ்த்திசை நோக்கியே—நல்ல
வண்ணச் சிறுவீடொன் ருக்கியே
மாசிலாப் பிள்ளையார் செய்துமே—வைத்து
வழிபடு வார்மலர் பெய்துமே



தெங்கிள நீர்இள மாவடு—இனம்
சேரும் கனிவகை மூன்ருடு

கொங்கு மணங்கமழ் பூத்திரள்—கூடை
கூடையா யெங்கெங்கும் கூட்டுவார்
மஞ்சட் செடிகளுந் தேடுவார்—குலை
வாங்கு கதிர்ச்செந்நெல் நாடுவார்
செங்கரும் பும்புதுக் காய்களும்—தேடிச்
சேரவைத் துப்படைப் பார்களே
சோறுபொங் கியெழும் செவ்வியில்—அவண்
சூழநிற் கும்இள நவ்வியர்
கூறுவர் பொங்கலோ பொங்கலோ—என்று
கூவிடு வார்இன்பம் பொங்கவே.
தங்கி மழைநலம் ஓங்கவே—எங்கும்
தங்கும் பசிப்பிணி நீங்கவே
செங்கதிர்த் தெய்வத்தைப் போற்றுவார்—வளம்
சேரக் கொழிக்கவே சாற்றுவார்
ஆடு மாடுகன்று காலிகள்—பிணி
யாதுமில் லாமல்சீர் சாலவே
நாடு முழுவதும் பொங்கலாம்—இந்த
நாளை எல்லோரும் விரும்பலாம்.

## ௫௬. பொங்கல் வாழ்த்து

பொங்குக! பாலுஞ் சோறும்
பொலிவுறு வளங்கள் யாவும்
பொங்குக! மாடுங் கன்றும்
மற்றுள செல்வம் யாவும்

பொங்குக! அன்பும் இன்பும்
புகழ்மிகு நலங்கள் யாவும்
பொங்குக! பேரும் சீரும்
பொங்கலோ பொங்கல் என்றே.

## ௩எ. உண்ணு முறை

உண்ணும் முறைசொல்வேன் கேளாய்
உணர்ந்தே அதன்வழி நீளாய்
பெரியோர் இடதுகைப் பக்கம்
பேணி அமர்புகழ் நிற்கும்
கையை நிலத்தில் ஊன்றாமல்
காலை மடக்கிஊன்றாமல்
செவ்வை யாகவே அமர்வாய்
சீராய்க் கிழக்குமுகந் தேர்வாய்
எண்ணிக் கடவுள் அடிவாழ்த்தி
எடுத்துக் கவளம் வாய்சேர்த்து
மெல்ல வேமென் றுமிழ்நீரால்
வேண்டும் பதம் செய்து சீரால்
மெதுவாக உண்ணு வாயே
விரைந்து செரிக்கும்உணர் நீயே
தித்திப்புப் பொருள்கள் முதலும்
சேர்கசப்புப் பொருள் ஈறும்
மற்றவை யாவும் இடையும்
வகுத்துண்டால் தீமை உடையும்

# ௩அ. ஊசல் ஆட்டம்

(இராகம் - கல்யாணி. தாளம் - ஆதி.)

பல்லவி

ஊசலாடுவோம்—நல்ல—ஊசல் ஆடுவோம்

அநுபல்லவி

சின்னஞ்சிறு பாவையரே
செல்வமிக்க பூவையரே (ஊச)

சரணங்கள்

பூவலரும் சோலையிலே
பொங்குமெழில் மாலையிலே
நாவலரும் பாடல்பாடித்
தேவரும் மயங்கத்தங்கி (ஊச)

பழையநாளில் பெருமைகொண்டோம்
பகரும்நடுவில் சிறுமைபூண்டோம்
பழையகாலம் போலப்பெண்கள்
பலவகையினும் உயர்ந்தாரென்று (ஊச)

நல்லஎழிலும் அறிவும்ஓங்க
நாளும்பொல்லாக் குணம்பின்வாங்கக்
கல்விக்கரசி புகழும்தேங்கக்
கருதிஇகழ்வார் எவரும்தூங்க (ஊச)

தமிழ்நாக ரிகமோங்கத்
தமிழ்மொழியின் பெருமைவீங்க
அமையும்நாட்டின் சிறுமை நீங்க
அனைவரும்ஒன் றாகியோங்க. (ஊச)

# ௩௧. கும்மி யடித்தல்

கும்மியடி பெண்ணே கும்மியடி பெண்கள்
கூட்டம் கலந்து கும்மியடி
செம்மையே சேரும் செந்தமிழ் அன்னையின்
சீரினைப் பாடியே கும்மியடி

நாடு பெருக்கமும் பெண்ணாலே—அந்த
நாடு முன்னேற்றமும் பெண்ணாலே
வீடு விளக்கமும் பெண்ணாலே எனும்
வேடிக்கை எண்ணியே கும்மியடி

கல்வித் தலைவியும் செல்வத் தலைவியும்
காணு மிடத்தினில் பெண்ணவார்
கல்வியும் செல்வமும் பெண்கள் வழியெனக்
கண்டமை தோன்ற நீ கும்மியடி

வீரமிகுந்த தமிழ்நாட்டில்—வீர
மெல்லிய லார்வழி யிற்பிறந்தோம்
வீரமும் தீரமும் நம்பொருள் என்றிதை
விண்டு மகிழ்ந்து நீ கும்மியடி

கையில் அணிந்த வளைகுலுங்க—எழில்
காணும் உடலில் வியர்வரும்ப
தெய்வத் தமிழன்னை சேவடி பாடி நீ
சீருட னேபெண்ணே கும்மியடி (கும்மி)

## ௪0. பந்தாட்டம்

ஓடியாடுவோம்—சேர்ந்து—ஓடியாடுவோம்
ஆடிப்பாடி நாடிப்பந்தை ஓடியாடுவோம்

உள்ளம்ஓங்கவே—மகிழ்—துள்ளியோங்குமே
கள்ளமின்றிப் பந்தடிக்கக் கருதிவாருமே

நிலத்தில்வீசியே—பந்தை—நின்றடிப்பதால்
தலத்தினின்று மீண்டெழும்பித் தாவும்ஓங்கியே

வெள்ளைப்பந்தொடு—செம்மை—மேவும்பந்தெலாம்
பிள்ளைகள்எல் லாரும்சேர்ந்து பிறழ்ந்தடிப்போமே

கைசிவக்கவே—உடல்—கருகிவேர்க்கவே
பெய்துபெய்து பந்தடிக்கப் பெரிதும்மகிழ்விதே

பந்தடிப்பதால்—உடலில்—பரவும்வலிமையே
மந்தமான செயலொழிந்து மலரும்புலமையே

உடல்அமைப்பினில்—எழும்—உண்மைஅழகொடு
திடம்அமைந்த நெஞ்சமோடு சீரும்திகழுமே.

## ௪௧. கோலாட்டம்

(இரா - காம்போதி. தாளம் - அடதாளம்)

பல்லவி

அருமையான தோழியரே
ஆடுவோம் கோலாட்டமே

**அநுபல்லவி**

ஆடுவோம் கோலாட்டமே
அகவருத்தம் ஓட்டமே (அரு)

**சரணங்கள்**

பெருமை சேர்நம் நாட்டில்வாழும்
பெண்மணிகள் யாருமே
சிறுமை நீங்கிச் செல்வமோங்கத்
திருவருள் பெருகவெண்ணி (அரு)

வீரம்கல்வி செல்வமும்
மேவும்நல்ல பொருளெல்லாம்
தீரஎண்ணில் பெண்கள்பண்டு
தேடிக்கண்ட செல்வமென்று (அரு)

வெள்ளிவீதி என்னும் புலமை
மெல்லியலும் ஔவையும்
எள்ளல்இல்லா எங்கள்முன்னோர்
ஆவரென்னும் ஏற்றம்கூறும் (அரு)

நாணமே முதன்மையான
நல்லநான் கொழுக்கமும்
பேணிஎன்றும் உரிமையாகப்
பெறுவதேநம் செல்வமென்று (அரு)

# சு௨. நாடகம்

("ஆடு பாம்பே" என்ற மெட்டு)

ஆடுமயிலே ஆடுமயிலே
அழகிய தோகைவிரித் தாடுமயிலே



பாடுகுயிலே பாடுகுயிலே
பண்டைத் தமிழிசையைப் பாடுகுயிலே

போடுமுகிலே போடுமுகிலே
பொருந்த மிருதங்கம் போடுமுகிலே

நாடுமனமே நாடுமனமே
நாடகக் காட்சியினை நாடுமனமே.

# சந. கட்டை இடுப்பில் நட்டுண்டே!

ஒருநாள் செட்டி மூடனுடன்
ஒன்றாய்க் கூடிப் போகையிலே
வழியில் பொழுது மறைந்ததனால்
மைதானத்தில் உறங்கினரே



அப்போ திருளில் திருடர்சிலர்
அங்கே செல்ல வழிநடுவில்
மூடன் மீது கால்இடற
முரட்டுக் கட்டை இஃதென்றார்

அதனைக் கேட்டான் மூடனுமே
அடங்காக் கோபங் கொண்டுடனே
கள்ளர் களுக்கும் அறிவுண்டோ!
கட்டை இடுப்பில் துட்டுண்டோ
என்றிடும் சொல்லைக் கேட்டார்கள்
ஏ! என வந்து பறித்தார்கள்
இந்தப் பணமும் செல்லுவதோ
என்றலும் மூடன் சொல்லுகிறான்
செல்லும் செல்லா ததற்கறிவீர்
செட்டியார் உள்ளார் செடிமறைவில்
என்றது கேட்டுச் செட்டியையும்
எட்டிப் பறித்துப் போயினரே!

## சச. எறும்பும் புறுவும்

ஆற்றினிலே வெள்ளம் பெருகி
அலைகள் புரளுதே
அதிலோர் எறும்பு தத்தளித்து
அலைந்து உருளுதே
அலையும் எறும்பும் கரையில்சேர
ஆசை கொண்டதே
அங்கோர் ஆல மரத்தில்புறு
அமரக் கண்டதே
அண்ணு! என்னைப் பாதுகாக்க
அன்பு காட்டிடாய்

அலகில் மரத்தின் இலையைப்பறித்து
அருகில் போட்டிடாய்
என்று புலம்பும் எறும்பின் துயரை
இனிது கேட்டது
இலையில் ஒன்றைப் பறித்துப்புரு
எளிதில் போட்டது



காற்றும் இலையை எறும்பின்பக்கம்
கடிதில் சேர்த்ததே
களிக்கும் எறும்பு தெப்பமேறிக்
கரையைப் பார்த்ததே

உயிர்கொடுத்த புருவை எறும்பு
மறக்க எண்ணுமோ
உயர்ந்த நேசம் பெற்றஇருவர்
பிரிய ஒண்ணுமோ
புருமரத்தில் எறும்பு புற்றில்
கொண்ட இருப்பிடம்
பொருந்தும் அவைகள் பேசிமகிழ்ந்து
புதுமை பெருக்கிடும்

(வேறு)

இப்படி இவைஇருக்க—ஒருநாள்
எங்கும்இரை காணுமல் அலைந்தவேடன்
அந்தவழி வரும்போது—கிளையினில்
அமர்ந்துள்ள புருவைக் கண்டு மகிழ்ந்தான்
கைதனில் வில்லைஎடுத்தான்—அம்பைஅவன்
கடிதினில் விடமிகக் குறிதொடுத்தான்
பார்த்து எறும்படடா!—நேசனுயிர்
போகாத படிவேடன் பதறிடவே
சுறுக்கென்று கடித்ததுவே—வேடன்குறி
தவறிப் புருமகிழ்ந்து பறந்ததுவே
ஆதலால் நாம்செய்நன்றி—என்றும்
ஆபத்தில் உதவியாம் கண்டுகொண்டீர்
நாம்பிறர்துயர் தீர்க்கவேண்டும்—வேண்டில்
நாம்உயிர்கொடுத்தேனும்நலம்காத்தல் வேண்டும்.

# சரு. இரக்கமுள்ள இளைஞன்

மூத்து முதிர்ந்து நரைத்துத் திரைத்து
முதுகு வளைந்த கிழவி
காற்றும் மழையும் வீசி அடிக்கக்
கலங்கு கின்றாள் வழியில்;

குளிரில் நடுக்கம் கொண்டு கையில்
கோலை யூன்றிச் சென்றாள்
கொடிய மழையின் இடிக்குப் பயந்து
குழறிப் பதைக்கும் நெஞ்சாள்!

வயது தளர்ந்து வலிமை குறைந்து
வாடி மெலிந்த நடையாள்
வருந்தும் மழையில் இருக்க நேர்ந்த
வாட்டம் பெரிதும் உடையாள்.

ஓய வில்லை ஒழிய வில்லை
ஓரே வேகம் மழையே!
ஒருவர் கூட அறிய வில்லை
ஓ ஓ! கிழவி நிலையே!

மிகுந்த வானம் பொழியப் பயந்து
வெருண்டு நின்று கொண்டாள்;
விரைந்து பலபேர் அவளை உராய்ந்து
வேக மாகச் சென்றார்.

பள்ளிக் கூடம் விட்ட வுடனே
பாலர் செல்லுங் கூட்டம்

பக்கத் திருந்த கிழவி துன்பம்
பாரா தெடுத்தார் ஓட்டம்.
பனித்த விழியும் நனைத்த துணியும்
பார்க்கச் சோர்ந்த நிலையே!
பாவம்! கிழவிக் குதவி புரியப்
பாலர் யாரும் இலையே!



அப்போ தருகில் ஓடும் குதிரை
வண்டி அவளின் மீதே
அடித்து மோதக் கிழவி வீழ்ந்தாள்
ஆ! ஆ! அந்தப் போதே.
விழுந்த அவளைக் காணப் பலபேர்
வேக மாக மொய்த்தார்
விரைந்து உதவி செய்ய யாரும்
விரும்பி மனது வையார்!

அங்கு வந்த இளைஞர் கூட்டத்
தறிவில் ஒருவன் உயர்ந்தான்,
அவனைச் சூழ்ந்த அனைவரையும்
அகற்றி உதவி புரிந்தான்.

## ௪௬. ஆலமரமும் நாணலும்

ஆற்றங் கரை அதனில் அழகான ஆலமரம்
நாற்புறமும் விழுதாகி நன்றாய்ப் பரந்ததுவே.



ஓங்கி வளர்ந்திருந்தே ஒன்றாய்த் தழைத்திடவே
பாங்கில்சென் றோரெல்லாம் பண்பாய்ப் புகழ்ந்தாரே.

அங்கே நாணல்புல்லும் அருமையாய்ச் செழித்தோங்கி
மங்காச் சிறப்போடு மாண்பாய் வளர்ந்தனவே.

வெள்ளம் பெருகிவந்தால் வெள்ளம் ஓடும்வழியே
மெள்ள வளைந்துவிடும் மெள்ள நிமிர்ந்துவிடும்.

காற்று வீசும்போது கடுகித் தலைசாய்க்கும்
காற்று வீசி நின்றால் கடுகித் தலை நிமிரும்.



ஆல மரம் அதனை ஆற்ற இகழ்ந்துபேசித்
தோற்றாய் பலமுறையும், தோல்வி எனக்கில்லை.



சீச்சீ எனைப்பாராய் சிறப்பாய் நிற்கின்றேன்
ஏச்சும் பலகூறி ஏமாப் புடன்இருக்க.

நாணல் இதைக்கேட்டும் நாணுமல் இருந்துவர
கோணல் பெருங்காற்றுக் கொடுமையாய் ஒருமாலை.

சுழன்று சுழன்றடித்துச் சுற்றிலும் வீசியதே
சுழன்றே பலமரங்கள் சுற்றிலும் வீழ்ந்தனவே.

வளையாத ஆலமரம் வளைந்து அலைந்தலைந்து
கிளைகள் ஒடிந்துவிழக் கீழ்வேரும் அற்றுவிட.

முறிந்து விழுந்ததுவே முன்போல நாணல்களோ
சிறிது வளைந்திருந்து சிறப்பாய் நிமிர்ந்தனவே

அடக்கம் அமரராக்கும் ஆன்ஞேர் பழமொழியாம்
அடக்கம் உடையவரே அழியாது வாழ்ந்திடுவார்.

## சஎ. பாரி வள்ளல்

இல்லையென்று கூருமல்
எடுத்தீயும் குணமுடையார்
என்றைக்கும் இறவாத
இசையுடையார் என்பாரே.

தமிழ்நாட்டில் அரசாண்ட
தனிவேந்தர் மூவரினும்
தன்புகழே பெரிதான
தவம்கொண்டான் பாரிஎன்பான்.

எந்நாளும் இரவலர்க்கு
வேண்டுவன எடுத்தீந்தான்
மன்ஞத உலகத்தில்
மன்னிய நல் புகழ்சேர்ந்தான்.

பறம்புமலை இருப்பிடமாய்ப்
பாராண்டான பாவலராம்



அறம்புகலும் கபிலரெனும்
அந்தணர்க்கு நண்பானான்.

முல்லையிளம் கொடியொன்று
முளைத்தெழுந்து படர்வதற்குக்
கொம்பின்றி அசைந்தலைந்த
குறிப்பொருளாற் கண்டிரங்கித்;

தான்ஊர்ந்த பொற்றேரைத்
தனிக்கொடிபால் நிறுத்தி அது
தான் அதன்மேல் படர்ந்தேறத்
தனிவேந்தன் செய்திட்டான்.

ஓரறிவாம் உயிரிதன்பால்
ஒப்பில்லா அருள்செய்த
பாரியைப்போல் உலகத்தே
பண்புடையார் யாருமிலர்.

ஞாலத்தில் பாலர்களே
நன்கொடைக்கே பாரியென்று
சீலத்தால் திருநாளும்
சிறப்பாகச் செய்கின்றார்.

## ௫௮. பேகன்

பழையபழைய நாளிலே
பகரும்இந்த நாட்டையே
அரசர் பலரும் புகழவே
ஆண்டான்பேகன் என்பவன்

கருணைசேரும் நெஞ்சமும்
கனிந்துநோக்கும் கண்களும்

உரிமையாகக் கொண்டவன்
உயரும்நல்ல பேகனே

சோலையில் உலாவவே
சூழ்ந்துமன்னன் சென்றனன்
மாலைபெய்த மழையினால்
மனமகிழ்ந்த ஓர்மயில்

தோகையைப் பரப்பியே
தோன்ற ஆடும் காட்சியைப்
பேகன் கண்டு குளிரினுல்
பெரிது நடுக்கம் கொண்டதே

குளிரைப்போக்கும் கொள்கையே
குணம்எனத்தான் கொண்டனன்
களியுடன் தன் போர்வையால்
கனிந்துமயிலைப் போர்த்தனன்

பேகனைப்போல் நாமுமே
பேணும்உள்ளக் கருணையால்
ஆகும்எல்லா உயிரையும்
அணைத்துக்காத்தல் கடமையே.

## சகூ. பேராசை பெருமோசம்

பேராசையினுல் நாயொன்று
பெரிதும் இரையைத் தேடிநொந்து
ஊரில்திரிந்து திருடியதோர்
அப்பத்துண்டை வாய்கௌவி

செல்லும்வழியில் ஓர்மடுவைச்
சென்றுகடக்கப் போட்டதொரு
நல்லபாலம் வழியாக
நடந்துசென்ற நாய்நீரில்

எட்டிப்பார்த்துத் தன்னிழலே
இருக்கக்கண்டே அதன்வாயில்

அப்பமும்இருக்கக் கண்டதனை
எட்டிப்பிடிப்பேன் எனஎண்ணி



எழுந்து நீரில் பாய்ந்ததுவே
இருந்தஅப்பமும் வீழ்ந்ததுவே
அழுந்திச்சேற்றில் மாய்ந்ததுவே
ஆசைமுழுதும் தீர்ந்ததுவே.

## ரு0. சோம்பேறிப் பையன்

பள்ளிக்கூடம் செல்லாத
பையன்ஒருவன் சோம்பலுடன்
எங்கும்திரிந்து விளையாட
யாருங்காணுன் என்செய்வான்
சோலைமேவி ஈக்களினைச்
சூழ்ந்தேவருவீர் என்றுனே

நாங்கள் இரையைத் தேடுவதில்
நாட்டம்கொண்டோம் ஒழிவில்லை
செல்வாய்என்று செப்பியதால்
திரிந்துதேனீ தனைக்கண்டு





அழைத்தான் அதுவும் தேன்சேர்க்கும்
அரியதொழிலை விடமாட்டேன்
போபோ என்றே கூறியதே
போனஇடங்கள் எவைகளினும்

எல்லாஉயிரும் தம்தொழிலில்
இசைந்துமுயலும் படிகண்டு
"ஐயோ நானும் வீணாக
அறியா திங்கே கெட்டேனே



கல்விபயிலும் தொழில் நீக்கிக்
கள்ளமுடனே விளையாடில்
பின்னால் துன்பம் தரும்" என்றே
பெரிதும்உணர்ந்து நடந்தனனே.

## ருக. ஓநாயும் ஆட்டுக்குட்டியும்

(நொண்டிச் சிந்து)

ஆட்டுக் குட்டியொன்று—தாகத்தால்
அலைந்தது தண்ணீர் தேடி நின்று
கடைசியில் காட்டினிலே—ஓடையொன்றைக்
கண்டது தண்ணீர் உண்ணவெண்ணி

மேட்டில் இருந்துவரும்—தண்ணீர்
விரைவாய் ஓடும் இடமிருந்தே

நீரை அருந்துகையில்—மேட்டில்
நின்றே கலக்கி நீருண்ணும்



ஓநாய் இவ்வாட்டை—எப்படியும்
உண்டே தீர்வேன் எனவெண்ணி

"ஓ! ஓ! அறிவில்லா—ஆடே! நான்
உண்ணும் இந்நீரைக் கலக்கியதே

என்னை நீ யாரென்று—எண்ணினுய்"
என்னவே குட்டியும் மிகப்பயந்து

"ஐயா! தாங்கள் உண்ணும்—இடத்தில்
இருந்து கீழேவிழும் நீர்என்னுல்

எப்படிக் கலங்கும் இந்த—ஏழையை
எண்ணுமல் மிகவும் கோபிப்பதேன்"
என்னவே ஓநாயும்—எண்ணமிட்டு
"இருஇரு சென்ற ஆண்டினில் நீ
இதுபோல் செய்ததுண்டு—அதை
எண்ணியே கேட்டேன்" என, "ஐயா
நான்பிறந் தொருதிங்கள்—கூட
நடக்கவில்லை பழி அடுக்கா" தென
நீசெய் யாவிடினும்—உன்றன்
நீண்ட பரம்பரை யில்பலபேர்
என்பால் பிழைசெய்தார்—அதனுல்
இன்றுனை அழிப்பேன் எனச்சொல்லி
ஆட்டைக் கொன்றதுவே—சிலர்
அழிக்கவெண்ணில் வீணுய்ப் பழிசுமத்திச்
செயலை முடித்திடுவார்—இந்தச்
செய்கையே மிகவும் கைதவமாம்.

## ருூ. விவேகாநந்தர்

செல்வம் நிறைந்தநம் இந்திய நாட்டின்
சீராம் பெரியோர் புகழ்நோக்கில்—இந்த
நல்ல உலகத்தில் எங்குமில்லை அவர்
நற்குண மேன்மைகள் வாய்ந்தவரே.
வங்காள தேயத்தில் வாழ்ந்தவராம்—எழில்
வள்ளல் விவேகா நந்தரென்பார்

பங்கமில்லாத புகழ்பரப்பி—இந்தப்
பாரில் விளங்கினுர் பண்புறவே.

அமெரிக்கா தேயமுஞ் சென்றனர் இந்தியர்
ஆயுங் கலையைப் புலப்படுத்த—நந்தம்
அருமைத் தவவாழ்வின் அழகெல்லாம் அந்நாடு
அறிந்து மகிழ விளக்கினரே.

கல்வியே இந்திய நாட்டினர் கைப்பொருள்
காணுவீ ரென்றங்கே காட்டினரே—நம்
நல்ல சிலேவழி பாட்டின் உயர்வையும்
நாடி யுணர உணர்த்தினரே.

எங்கும் நிறைந்தவன் ஆண்டவன் அவனுல்
என்றும் நலமே உளதென்ருர்—அப்
பொங்கும் இறைவன் கருணேயை அடையப்
பொருந்தும்வழி அன்பின்வழியேயென்ருர்

கண்ணுக் கெட்டா அந்தத்தேயத்தி லுள்ளவர்
காண நம்இந்தியர் மாட்சிமையை—இவ்வா
றெண்ணி மகிழ எடுத்துரைத்தார் அவர்
இயல்பினே எப்படி ஏத்துவதே.

இத்தகை யார்வாழ்ந்த இந்திய தேயத்தில்
இன்று வாழ்ந்துவரும் நம்மவர்கள்
உத்தமர்சென்ற வழியிற் சென்ருல் என்றும்
உண்டு சுதந்தரம் உண்மையதே.

## ருங. கடவுள் வாழ்த்து

[திருக்குறள் முதல் அதிகாரத்தைத் தழுவியது]

("முத்திநெறி அறியாத" என்னும் மெட்டு)

உலகத்தில் முதல்வன் நீ
ஓரெழுத்தே அகரம்போல்
பலகலைகள் பயின்றாலும்
பயனுண்டோ நினைமறந்தால்
மலர்விரும்பும் பெருமானே
மாட்சிமையே நினையணையின்
விலகுமன்றோ எத்துயரும்
வேண்டுதல்வேண் டாமையிலாய்!

நினக்குரிய மெய்ப்புகழை
நினைவார்க்கே வினையில்லை
எனக்கருதி ஒருணர்வாய்
இருப்பாரே இனிதிருப்பார்
தனக்குவமை இல்லாத
தனியறமே தண்ணளியே
இனிக்கவலைப் பிறப்புண்டோ
இறையே நின் தாள்வாழி!

யானே தவஞ்செய்தேன்; ஏழ்பிறப்பும் எப்பொழுதும்
யானே தவமுடையேன்; எம்பெருமான்!—யானே
இருந்தமிழ்நன் மாலை இணையடிக்கே சொன்னேன்
பெருந்தமிழன்; நல்லேன் பெரிது.

—பூதத்தாழ்வார்

வழங்குகின் றுய்க்குன் அருளா ரமுதத்தை
வாரிக்கொண்டு
விழுங்குகின் றேன்விக்கி னேன்வினை யேனென்
விதியின்மையால்

தழங்கருந் தேனன்ன தண்ணீர் பருகத்தந்து
உய்யக்கொள்ளாய்
அழுங்குகின் றேனுடை யாயடி யேன்உன்
அடைக்கலமே.

—மாணிக்கவாசகர்

அறிவிலேன் அறிந்தார்க் கடிப்பணி புரியேன்
அச்சமும் அவலமும் உடையேன்
செறிவிலேன் பொதுவாந் தெய்வநீ நினது
திருவுளத் தெனை நினை யாயேல்

எறிவிலேன் சிறியேன் எங்ஙனம் புகுவேன்
என்செய்வேன் யார்துணை என்பேன்
பிறிவிலேன் பிரித்தா லுயிர்தரிக் கலனென்
பிழைபொறுத் தருள்வதுன் கடனே.

—இராமலிங்கர்

